# செந்தமிழ்ச் செல்வி

## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

ஆருவது பரல்

சிலம்பு-௫௦] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௭, தை (Feb '76) [பரல்-௬

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

௧. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்டி.
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்

௨. ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், மதுரை.

௩. திரு. கொண்டல், சு. மகாதேவன் அவர்கள், எம். ஏ., பி. எஸ்ஸி
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித்துறை.

௪. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப். லிங்.
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

௫. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்ஸ்), (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

௬. புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6.

௭. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

---

## உள்ளுறை

ACC. NO. 38096. 14.2.76


# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦எ, தை | பரல் |
|---|---|---|
| ருo | பிப்ரவரி 1976 | சு |


## எங்கும் திருவள்ளுவர் விழா நடைபெறும் 'தை'யில் அடிகளார் திருக்குறள் புலமை அறிவோம்

மறைத்திரு மறைமலையடிகளார் தமது இளமைக் காலத்திலே தமிழ் இலக்கண இலக்கியங்கள் சிலவற்றை முழுதும் நெட்டுருச் செய்துள்ளனர் என்பதும், அவற்றுள் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனுர் இயற்றிய 'திருக்குறள்' ஒன்றென்பதும் அவர்கள் 27-8-1897 இல் டாக்டர் வே. சாமிநாதையரவர்கட்கு 'நற்சான்றிதழ்' கேட்டு எழுதிய கடிதத்தால் அறிவோம். அதனைச் சிலம்பு 49 பரல் 12 இல் கண்டோம்.

"15-2-1897 இல் 'நாகை நீலலோசனி' என்னும் இதழில் 'நாகைவாதி' என்பார் எழுதிய உரையை மறுத்து விசேட உரை எழுதி வெளியிடப்பெற்றது. அது கண்டு மாயாவாதமாகிய தமது மதத்தில் வைத்த துரபிமானத்தால் 'துவிதமத திரஸ்காரி' எனப் பொருந்தாப் பெயர் புனைந்த ஒருவர் 'முதற்குறள் வாதம்' எனப் பெயரிய நூலொன்றெழுதி வெளியிட்டனர். அதுகண்ட எம்மனோர் சிலர் விரும்பியபடி யாம் 'முதற்குறள் வாத நிராகரணம்' எனப் பெயர் மிலைந்ததொரு மறுப்பு நூலை எழுதி 1898 இல் நாகை வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபையாரைக் கொண்டு வெளியிட்டனம்." என்று அடிகளார் எழுதியுள்ளனர். அந்நூல் $19\frac{1}{2} \times 10\frac{1}{2}$ செ. மீ. அளவில் 50 பக்கங்களைக் கொண்டதாகும். அதனை எழுது முன்பே அடிகளார் திரிசிரபுரம் மாபெரும் புலவர் நாகை புத்தகக்கடை திரு. வே. நாராயணசாமி பிள்ளை அவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்கள் சிலவற்றை முறையாகப் பாடங் கேட்டதோடு அருட்பெருந்திரு சோமசுந்தர நாயகரிடம் சைவ

சித்தாந்தத்தை ஐயமறத் தெளிவுபெறப் பாடங்கேட்டுள்ளனர் என்பது அறிதற்பாலது.

"1898 இல் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதராக வேலை ஒப்புக்கொண்டபின் இளநிலைப் பட்டம் முதலாண்டு (B. A. Junior) மாணவர்கள் உவந்து கேட்டுப் பெரிதும் மகிழும்வண்ணம் திருக்குறள் பாடம் சொல்லி வைத்தேம்" என்று தமது 28-7-1899 நாட்குறிப்பில் எழுதியுள்ளனர். அதனால் அடிகளார் திருக்குறள் பரிமேலழகருரையினை ஐயந்திரிபறக் கற்றுள்ளனர் என்பது நன்கு புலப்படுகின்றதன்றோ! கிறித்தவக் கல்லூரியில் தமிழாசிரியராக இருக்கும்போதே தாம் நடத்திவந்த 'ஞானசாகரம்' (அறிவுக் கடல்) என்னும் இதழ்2ஆம் தொகுதி 5, 6, 7 ஆம் பகுதிகளிலும் 3 ஆம் தொகுதி 6, 7 ஆம் பகுதிகளிலும் "திருக்குறள் ஆராய்ச்சி" என்னும் தலைப்பில் எழுதிய நூல் 21 × 14 செ. மீ. அளவில் 72 பக்கங்களோடு முடிக்கப்பெறுமல் நின்றுவிட்டது. அடிகளார் பிரிவுக்குப் பின் அவருடைய அணுக்கத் தொண்டர் கனகராயர் (பொன்னரசு) திருக்குறள் ஆராய்ச்சியைத் தனி நூலாக வெளியிட்டுள்ளார்.

18-5-1935 இல் சென்னை, பச்சையப்பன் மண்டபத்தில் திருவள்ளுவர் திருநாள் கழகத்தினர் நடத்திய திருவள்ளுவர் விழாவில் அடிகளார் தலைமைதாங்கி ஆற்றிய தலைமையுரை அக் கழகம் வெளியிட்ட திருவள்ளுவர் விழா சிறப்புமலரில் வெளிவந்துள்ளது. அன்று அவர்கள் எழுதிய தமது நாட்குறிப்பில் திருக்குறளைப் படித்து முக்கியமான குறட்பாக்களை மனத்தில் பதித்துக் கொண்டேம் என்றும், எமது 18 ஆம் அகவையில் திருக்குறள் முழுமையும் நெட்டுருச் செய்தேம் என்றும் 40 ஆண்டுகளாகிய பின்னரும் பேர்பாதியளவு இன்றும் எமது நினைவில் இருக்கிறது என்றும் எமது தலைமையுரை கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் 2¼ மணியளவு நிகழ்ந்தது என்றும் எழுதியுள்ளார்கள்.

1950 ஆம் ஆண்டு நாட்குறிப்பில் சனவரி முதல் சில நாட்களில் திருக்குறளுக்கு உரை யெழுதியுள்ளதாகவும் சில நாட்களில் "வாழ்க்கைக் குறள்" என்ற தலைப்பில் சில குறட்பாக்களை இயற்றியுள்ளதாகவும் அடிகளார் எழுதியிருப்பது இச் சிலம்பு 3 ஆவது பரலில் காணப்பெறும்.

வள்ளுவர் ஆண்டு

அடிகளார் திருவள்ளுவர் காலத்தைப் பற்றி ஆராய்ந்து கி. பி. யுடன் 31 ஆண்டுகளைச் சேர்த்துத் திருவள்ளுவர் ஆண்டைக் கணக்கிடுதல் வேண்டுமென்று முடிவு கட்டியது

அறிஞர் பெருமக்கள் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப் பெற்று நடைமுறையில் வந்துள்ளது. எனவே இத் தைத்திங்கள் வள்ளுவராண்டு 2007 ஆகத் தொடங்கியுள்ளது.

திருக்குறள் ஆராய்ச்சியை எழுதி முடிக்காமல் விட்டது போல, தாம் தமது ஞானசாகரம் (அறிவுக்கடல்) 5 முதல் 10 ஆம் தொகுதிகள் முடியச் சிற்சில பகுதிகளில் எழுதிவந்த 'சிவஞானபோத ஆராய்ச்சி' என்ற நூலும் முடிக்கப்பெருமல் நின்றுவிட்டது. அதன்பின்னர் 11 ஆவது தொகுதி முதல் 14 ஆவது தொகுதி முடிய 'மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்' என்னும் நூல் எழுதி முடிக்கப்பட்டது. அடிகளாரால் தொடங்கி எழுதி முடிக்கப்பெருத திருக்குறள் ஆராய்ச்சியும் சிவஞானபோத ஆராய்ச்சியும் தமிழ்மக்கள் தம் இரு கண்ணெனப் போற்றக் கூடிய சிறந்த நூல்களாகும். அவற்றை அவர்கள் முடிக்காமல் விட்டது தமிழ்மக்கள் செய்த தவக்குறைவேயாகும்.

அவ்விரண்டையும் எழுதி முடிக்கும் ஆற்றல் உடையவர் அடிகளாருடைய தலைசிறந்த நன்மாணக்கர் தவத்திரு அழகரடிகளாரே யாவர் என்னும் எண்ணம் என் மனத்தின்கண் தோன்றியது. எனவே 29-1-76இல் அவர்கட்கு யான் எழுதிய கடிதம் அடியிற் காண்க:

*''அடிகளார் இருகண் போன்ற திருக்குறள் ஆராய்ச்சியினையும் சிவஞானபோத ஆராய்ச்சியினையும் முடிக்காமல் அரைகுறையில் நிறுத்திவிட்டனர். அவ்விரண்டையும் தாங்கள் எழுதி முடிப்பதே தங்கள் தவப்பேராசிரியரவர்கட்குச் செய்யும் சீரிய தொண்டாகும். 'எனது எண்ணம் முற்றுப்பெறும்' என்ற நம்பிக்கையோடுதான் இதனை எழுதுகின்றேன். அவ்விரண்டு நூல்களும் தமிழ் மக்களுக்கு அழியாப்புகழ் தரும் பெருநூல்களாகும். தாங்கள் எழுதி முடிப்பீர்கள் என்றே அவர்கள் அரைகுறையில் நிறுத்திவிட்டனர் போலும் என்றுகூட நினைக்க வேண்டியதாகிறது''.*

அதனைப் பெற்று 'மெய்கண்ட நூல் உரை நடை' எழுதிவரும் தவத்திரு அழகரடிகள் எனக்கு 2-2-76இல் எழுதிய கடிதம் கீழே தரப்படுகிறது.

*"மெய்கண்டநூல் உரைநடை, 'சித்தியார் பரபக்கம்' வரையில் முடிந்திருக்கிறது. 'சித்தியார் சுபக்க'மும், 'சிவஞான போத'மும் எழுத வேண்டும். 'மே' திங்களுக்குள் முடியலாம். அதையெழுதி முடித்தபின் திருவருள் உதவினுல் தாங்கள் விரும்பியபடி 'திருக்குறள் ஆராய்ச்சி'யும், 'சிவஞானபோத ஆராய்ச்சி'யும் எழுத மேற்கொள்ளலாம். அடிகளார் எழுத்தெங்கே! ஆராய்ச்சிகள் அருங் கருத்துக்கள் எங்கே! அடியேன் நிலைமைகள் எங்கே! ஆயினும் விடுபட்டுவிட்டதற்கு என் செயலாம்? இயன்றது செய்வோம். தங்கள் எண்ணங்கள் நாட்டுக்கு நலம் பெருகுபவை".*

வ. சு.





## 6. இனிமைச் சுவை

இதன் பொருள் நலத்தை முதலில் திட்டப்படுத்திக் கொள்ளலாம். இனிமையே சுவை எனப்படும்; ஆதலின் இனிமைச் சுவை எனத் தலைப்பமைந்தது; சுவை வேறு இனிமை வேறல்ல;

'தமிழ்' என்னும் சொல்லே 'இனிமை' என்னுங் கருத்தைத் தரும் என்று முன்னோர் விளக்கினர்; "தமிழ் தழிய சாயலவர்" என்னும் சிந்தாமணி வரிக்கு (2026) உரையாசிரியர் நச்சினார்க் கினியர் 'இனிமை தழுவிய சாயலையுடையவர்' என்று பொரு ளுரைப்பர்; அடிகள் தமிழ் நலத்தில் திளைத்தவர்; ஆதலின் இனிமைச் சுவை அவர்க்கு மிகச் சிறப்பாக வாய்த்துவிட்டது.

மொழியே இனிமையாதலோடு அதனில் இலக்கியமும் அமைவதானல், இனிமைச் சுவை இன்னும் மிகும்; அது, பாலில் சர்க்கரை கலப்பது போன்றது; இலக்கியத்தில் மெய்க்கல்வியும் பொருந்துமானல் சர்க்கரைப் பாலுடன் தேனுங் கலந்ததுபோல் மிகவும் இனிக்கும்.

> "சிறையாரும் மடக்கிளியே இங்கேவா பாலொடு தேன்
> முறையாலே உணத் தருவன்"

என்றார் திருஞான சம்பந்தர்;

அருட் கல்வியாகிய மெய்க் கல்வியே 'தேன்' எனப்படும். கடவுட் பேரின்பம் தேன்; இவ்வாற்றால் அவ்வானந்தத் தேனில் மிகத் திளைத்த மாணிக்கவாசகரது திருவாசகமும் 'தேன்' என்று வழங்கப்பட்டது;

> "உலப்பிலா ஆனந்தத் தேன் சொரிந்து"
>
> "ஆனந்தத் தேன் இருந்த பொந்தைப் பரவி"
>
> "திருவாசகம் என்னுந் தேன்"

என்னும் திருவாசகத் தொடர்களே, முறையே இப் பொரு ளுணர்த்தும்; தமிழ்மொழி, பால்; தமிழிலக்கியம், சர்க்கரை;

தமிழின் மெய்க்கல்வி, தேன்; தமிழின் பேரினிமைக்குக் குறைவே இல்லை.

தமிழ்மொழி, பாற் சுவையுடைய தென்பது, அதன் இலக்கண அழகு; சர்க்கரையும் இடப்பட்ட தென்பது, அதன் இலக்கிய இனிமை; தேனும் முறையாகக் கலந்ததென்பது மெய் யுணர்வின் நடுவுநிலைச் சுவை.

நடுவுநிலை என்பது, சிற்றம்பலம்; திருவாசகம் திருச் சிற்றம்பலக் கோவையார், சிற்றம்பலச் சுவையுடையன; தமிழில் தொல்காப்பியம் இலக்கணப் பெருமைக்கும், சங்க நூல்கள் இலக்கியச் சிறப்புக்கும், திருமுறைகள் மெய்யுணர்வு மேன் மைக்கும் உரியன; இம் மூன்றும் ஒருங்கமைந்த பேரினிமை மொழித்திறமே, 'தமிழ்மறை' எனவும் 'பொதுமறை' எனவும் வழங்கும் வேத நூலாகிய திருக்குறளாய்த் திகழ்கிறது.

### இலக்கண இனிமை

மண்ணிடைச் சில இலக்கண வரம்பிலா மொழிபோல், தமிழ்மொழி, வெறும் எண்ணிடைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ? தமிழ்மொழிக்கு இலக்கண வரம்பு உயர்வாக அமைந் திருப்பதுபற்றித் தமிழ்மக்களே அன்றி உலக மக்கள் அவ்வளவு பேரும் பெருமைப்படலாம்.

'இலக்கணம்' (லக்ஷணம்) என்பதே, திருத்தமான அமை வுக்கும் அழகுக்கும் உரியது. நல்லறிஞராயிருந்தால் அவர்க்கு இவ்வழகு சுவைக்காமற் போகுமா? தொல்காப்பியம் தமிழின் திருத்தமான அமைப்புகளை அழகுகளை நன்ருக விளக்கித் தமிழ் மொழிக்கு இனிமையை ஊட்டுகிறது. தொல்காப்பியம் முழு முதல் நூல்; இலக்கணம் முழுமையும் நிறைவாக உணர்த்துவது; அடிகள் இதனை நன்கு ஆராய்ந்து சொக்கிப் போய், அதன் இனிமைகளை எத்தனையோ வகையாக விரித்து, ஆங்காங்கும் சுவை தோன்ற விளக்கியிருக்கின்றனர்; ஒன்று காணலாம்.

### ஆய்தத்தின் மாட்சி

தமிழ் நெடுங்கணக்கிலுள்ள ஆய்த எழுத்துக்குத் 'தனி நிலை' என்றும் பெயருண்டு; உயிரெழுத்துக்களையும் சாராமல் மெய்யெழுத்துக்களையும் சாராமல் தனித்து நிற்றல் முதலிய நிலைகளால் 'தனிநிலை' என்று அது பெயர் பெற்றுவிட்டது; ஏன் இவ்வாறு ஆய்தம் தனிப்பட வேண்டும் என்றும், தொல் காப்பியர் இதன் நிலைமைக்கு என்ன காரணம் கூறுகிருர், எப்படி வழிவிடுகிருர் என்றும், ஆசிரியரடிகளுக்குச் சிந்தனை பிறந்தது.

தொல்காப்பியர் ஏனை எல்லா எழுத்துக்களுக்கும் 'தலை' 'மிடறு' 'நெஞ்சு' எனப் பிறக்குமிடமும், 'பல்' 'இதழ்' 'நாக்கு'

'மூக்கு' 'அண்ணம்' என உறுப்பின் தொழில்களும் கூறுகிருர்; ஆய்தத்துக்கு மட்டும் இவற்றில் எதுவுங் கூறவில்லை; அடிகள் சிந்தனை, நேர் ஆய்விற் சென்று சோதித்துக் கொண்டது, பிறப்பிடம் தோன்றவில்லை, உறுப்புகளின் துணையும் பெறவில்லை; பிறப்பிடமேனும் உறுப்பின் தொழில்களேனும் பெருமையால், 'ஆய்த' எழுத்து, 'தனிநிலை' என்னும் பெயரைப் பெற்றது எனவும், அதனுலேதான் ஏனை உயிரெழுத்து மெய்யெழுத்துக்க ளோடு அது சாராமல் தனிநிலையாய் நிற்பதாயிற்று எனவும் காரணம் தெரிந்தது.

அடிகளார் சிந்தனையும், தொல்காப்பியச் சுவையும், தமிழ் மொழியின் தோய்வும் இவ்வளவோடு நிற்கவில்லை; ஆய்தம் மூன்று புள்ளிகளைத் தனக்கு வடிவமாகக் கொண்டது ஏன் என்றும் அவர் கருதினுர்.

தொல்காப்பியம் மக்கள் வாழ்க்கைக்கே இலக்கணம் கூறும் நூல். 'பொருளதிகாரம்' என்று ஓர் அதிகாரமும் தனக்கே உரித்தாக வகுத்துக் கொண்ட நூல். எழுத்து சொல் லாகி அவ்வளவோடு நின்று விடுவதானுல், மொழி என்பது வாழ்க்கைக்குப் பயன்படாது; வாழ்க்கைக்குப் பயன்படாத மொழி எதற்கு வேண்டும்? சொல் வடிவுகளோடு கூடிய மொழிக்குப் பொருள் என்ன? வாழ்க்கை தானே பொருள். அதனுல் பொருளதிகாரம் என்பது கருத்ததிகாரம் எனக்கொள்ளப்பட்டு, இயற்கை வாழ்க்கையை இயல் தமிழ்க்கு அது விரித்து விளக்கு கிறது.

வாழ்க்கையின் அழகுகளைச் சொல்லி அதனை ஒழுங்கு படுத்துவதே பாட்டின் பயனுதலின், வாழ்க்கைச் சிறப்பு, செய்யுளியலையும், அது கவர்ச்சியாகச் செய்யப்படுவதற்குரிய உவமை அணியியலையும், அடுத்தடுத்துத் திரிபு கொள்ளாதபடி நிலைப்படுத்தும் மரபியலையும் உட்கொண்டு, எல்லாம் பொருளதி காரப் பகுதிகளாய் எழுந்தன.

எழுத்துக்களும் சொற்களுங்கூட, உலகத்தில் வாழ்க்கை நடத்தும் மக்களின் இயக்கம் போலவே 'உயிரும்' 'உடம்பும்' 'உடம்போடு கூடிய உயிரும்' இயங்கும் முறையிலேயே இயக் கங்கள் கொள்வன எனவும், மொழி என்பது இதனுல் மக்கள் வாழ்க்கையின் பிழிவே எனவும், மொழியின் இலக்கணங்கள், வாழ்க்கையின் இலக்கணமாய், வாழ்க்கையோடு இனப்பட்ட மெய்யுணர்வியலின் (தத்துவ இயலின்) இலக்கணமாய் அமைந்து விளங்குவனவே எனவும் முடிபுகள் தோன்றின.

இவை, ஆய்த எழுத்தின் வடிவுக்கும் பெயர்க் காரணத்துக்கும் வழி திறந்துவிட்டன. தமிழ் மொழியியல், மெய்யுணர்வியலின் அடிப்படையில் மேலெழுந்து, உலக நடைக்கு உதவும் அழகு புலப்பட்டுவிட்டது; உள்ளத்துணர்வில் மெய்யுணர்வியல் எழுந்து, வாக்கின் வழியே தமிழ்மொழியாய் வெளிப்பட்டுச் செயல் வகையாய் உலகநடை நடைபெறும் இயற்கையே, இந் நினைவு சொல் செயல்களின் இயல்புகளே, எழுத்தும் சொல்லும் பொருளுமாகிய தொல்காப்பிய உணர்வு என்பதுந் தெளிவாயிற்று. எழுத்துக்கும் மெய்யுணர்வியலுக்கும், மிகப் பொருத்தமான தொடர்பிருப்பதும் விளங்கியது. 'ஆய்தம்' என்னுஞ் சொல் 'நுட்பம் உடையது' என்னும் பொருள் வாய்ந்தது.

> "ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
> ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்"
> (தொல், உரிச்சொல், 32)

என்று தொல்காப்பியரே இந் நுட்பப் பொருளைப் புலப்படுத்துகிறார். ஆய்தம் என்பதன் இப் பெயர்க் காரணத்தால் ஆய்த எழுத்து 'மூலம்' என்பதும், ஏனை எழுத்துக்கள் 'காரியம்' என்பதும் புலப்பட்டன. மெய்யுணர்வியலின் உண்மைகளோடு ஆய்த எழுத்தின் நுட்ப மூலம், தொடர்புடைத்தாதல் வேண்டும் என்பதும் தெரிந்தது; அடிகள் வாக்குகளைக் காணலாம்:

"ஆய்த எழுத்து, உயிரெழுத்தும் அல்லாதாய் மெய்யெழுத்தும் அல்லாதாய்த் தனித்து நிற்றலின் 'தனிநிலை' என்னும் பெயர் வாய்ந்தது.

"ஆய்தம், எழுத்தொலியாய்ச் சொல்லின்கண் நின்று பொருளை அறிவுறுத்தலின் இது விந்துவின்கண் நின்றும் பிறப்பதே.

"விந்து மாயையின், இயற்கைக் காரண ஒலி ஆய்தம்.

"ஒரே தன்மைத்தாகிய 'ஆய்தம்' என்னும் விந்துவொலி, .........பல திறப்பட்ட ஒலி எழுத்துக்களாய்க் காரியப்படுத்தப் படலாயிற்று......திரிபு படுத்தப்படும் காரிய ஒலிகளே வெவ்வேறெழுத்துக்களாம். இக் காரிய ஒலிகளுக்கு முதலில் நிற்கும் ஆய்தம்......காரண ஒலி.

"தலை, மிடறு, நெஞ்சு என்னும் இடங்களைப் பற்றுக் கோடாகக் கொள்ளுதலும், பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் என்னும் உறுப்புக்களால் திரிபுபடுத்தப் படுதலும் இல்லாதது.

"இவ்வாறு இம் மூன்றிடங்கட்கும் ஐந்துறுப்புகட்கும் வேருய்த் தனித்து நிற்றலினுலன்றே, ஆய்தம், 'தனிநிலை' எனவும் வழங்கப்பட்டது.

"இது பற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார், ஆய்தத்திற்குப் பிறப்பிடமேனும் உறுப்பின் றொழிலேனும் கூறிற்றிலர்.

"இக் கருத்துணராத பவணந்தியாரோ, தாமியற்றிய நன்னூலில், 'ஆய்தத்துக்கு இடம் தலை, அங்கா முயற்சி' எனப் பிழைபடக் கூறினார்.

"ஆய்தமாகிய காரண வொலியோ, ஓரிடத்தைப் பற்றி நில்லாமலும், உறுப்புக்களாற் றடை செய்யப்படாமலும் இயங்குதலைச், சொல்லிக் காண்க.

"தன் இயல்பினில் இயங்குவதே ஆய்தம் என்னும் முதற் காரண ஒலியின் இயற்கை.

"இது விந்துவென்னுங் காரணத்தின் ஒலி வடிவாதல் பற்றியே, இதற்குப் புள்ளி வடிவு சொல்லப்பட்டிருக்கிறது; விந்து என்பது புள்ளி வடிவினது.

"மூன்று புள்ளியிட்டு எழுதப்படுதல் என்னையெனின், விந்து மாயையின் ஒலி தன் நிலையில் நிற்பதாயின், ஒற்றைப் புள்ளியே பெறும்; அவ்வாறன்றி, அது 'அசுத்த மாயை'யை ஊடுருவி இயங்குதலால், தான் தனித்து இயங்கு நிலையில் ஒரு புள்ளியினையும், 'சுத்த மாயை'யை ஊடுருவி இயங்கு நிலையில் மற்றொரு புள்ளியினையும், 'பிரகிருதி மாயை'யை ஊடுருவி இயங்கு நிலையிற் பின்னும் ஒரு புள்ளியினையும் ஆக மூன்று புள்ளியினைப் பெறுவதாயிற்று.

"விந்து, காரண ஒலியாகிய ஆய்தமும், அதன் காரியங்களாகிய அகரம் முதல் னகர இறுவாயான முப்பதெழுத்துக்களும், தோன்றுவதற்கு நிலைக்களனும்.

"காரண வொலியின் (ஆய்த வொலியின்) முதல் காரிய வொலியே அகர உயிர்; அங்காந்து கூறுங் காரியப்பாட்டாற் பிறக்கும் அகரவொலியை முதற்காரணம் என்றல் அமையா(து).

"அகர வொலிக்கும் முற்பட்ட காரணமாய், உந்தியினின் றெழும் ஆய்த வொலியே எல்லா எழுத்தொலிகட்கும் முதலாம்.

"(திருவள்ளுவர்) அகர வொலி என்றேனும் அகரவெழுத்தென்றேனுங் கூறுமல், அவையிரண்டற்கும் பொதுப்பட 'அகரம்' என்று கூறினமையால், (புலப்பட்ட) அகரவொலியும் பிற எழுத்தொலிகளுந் தோன்றுவதற்கு இடமாய், அங்காந்து வாயின்கண் நிற்கும் இடைவெளியே அகரமாமெனை, (நுண்ணிய அகரத்தைக்) கருதினார்.

"மிக நுண்ணிய இடைவெளி வடிவாய் நிற்கும் (நுண்ணிய) அகரமும், அவ் வெளியின்கட் டோன்றி இயங்கும் விந்து காரண ஒலியின் முதற் காரியமாய் ஒலிக்கும் (புலப்பட்ட ஒலி) அகரமும், அவ்வொலியின் அடையாளமாய் வரிவடிவில் எழுதப் படும் (வரி) அகரமும் என அகரம் மூவகைத்து.

'எஃகு' 'கஃசு' என்னும் சொற்களிற் போல, ...தன் காரிய வொலிகளில் சார்ந்து நின்றன்றி அது பொருள் தராமை யினாலும், தன் காரியமான ஓர் எழுத்தொலியையே தான் சார்ந்து நின்று அதனைப் பலவேறு ஒலிகளாய்ப் பலவேறு மொழிகளில் வழங்கச் செய்தலினாலும், அதனை ஆசிரியர் (தொல்காப்பியர்) சார்பெழுத்து என்று கூறுவாராயினர்.

"தமிழின்கண் உள்ள ஒற்றெழுத்து உயிரெழுத்துக் களோடு இவ் வாய்த எழுத்தையும் குற்றியலிகரம் குற்றிய லுகரங்களையும் சார்த்தி, உலகத்தின்கட் பரவி வழங்கும் எந்த மொழியின் எந்த எழுத்தையும் செயற்கைப்படுத்துப் பிறப் பித்தல் எளிது.

"பற்றுக்கோடும் தடையுமின்றித் தானே இயங்குவதூஉம், பற்றுக்கோடும் தடையும் உற்றுத் தாமே இயங்குவனவும், பற்றுக்கோடும் தடையும் உற்றுத் தாமே இயங்காதனவும் என, ஒலி எழுத்துக்கள்தாம் மூவகைய; அவற்றுள், முதலது ஆய்த வொலி; இரண்டாமவை உயிரெழுத்துக்கள்; மூன்றாமவை ஒற்றெழுத்துக்கள்".

(அறிவுரைக் கோவை, பக். 59-62, 71-72)

இவை, ஆய்த எழுத்துக்கு அடிகள் கண்ட ஆய்வுரைகள்; ஒவ்வோர் எழுத்தொலி பற்றியும் அடிகளார் இவ்வாறு ஆய்ந் திருக்கிறார். தொல்காப்பியத்தின் ஆழ்ந்த பயிற்சிகள் இவற் றிற்குக் காரணம்; மொழியின் இயற்கை அமைதியை அடிகளார் நன்கு கண்டு கொண்டனர்; அச் சுவைகளைப் பிற மொழிகளிற் காணக் கூடாமையால், தமிழ்மொழியில் அடிகட்கு மேன் மேலும் அன்பும் அழுத்தமும் உண்டாயின. உலகத்தின் முக்கிய மொழிகளான ஆங்கிலத்திலும் சமக்கிருதத்திலும் அடிகள் புலமையுடையவராயிருந்தும், அவ் விரண்டின் சுவை யிலும் ஊறியவர்களாயிருந்தும், தமிழ் மொழியின் பெருஞ்சுவை அவர்கள் திருந்திய உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்திருக்கிறது.

தாய்மொழியாதலின் அது பற்றிய கடமையால் அடிகள் அவ்வாறு அன்பு கொண்டார் என்றால், தமிழ்மொழியின் விஞ்சிய இனிமைக்கு அடிகளார் காரணம் காட்டாமல் இல்லையே! தமிழ் மொழியின் திருந்திய அமைதியை அடிகளார் வியக்காமல்

இருக்கமுடியுமா? 'தமிழ் மொழியும் ஏனை மொழிகளைப் போல் கருத்தறிவிக்கும் ஒரு கருவிதானே, அடிகளார் அதில் மட்டும் ஏன் இவ்வளவு பிடிப்பாய் இருக்கிறார்' என்றால், ஏன் இருக்க மாட்டார்? அவரைப்போல் தமிழ் மொழியின் திருந்திய இயற்கை அமைதியையும் அழகையும் மற்றவர் அழுந்திச் சுவைக்கவும் கண்டு இன்புறவும் அறிந்துகொள்ளாதவரா யிருக்கின்றனர்; அதற்கு என்ன செய்யலாம்?

தமிழ்மொழி படிமுறையில் எழுந்ததன்று :

தமிழ் மொழிக்குள்ள மற்றொரு தனிச்சிறப்பையும் அனை வரும் கண்டுகொள்ளல் வேண்டும்; தமிழ்மொழி இயற்கை மொழி என்பதையும் பழைய முதல்மொழி என்பதையும் பலரும் அறிவர்; மேலும் அது, மெய்யுணர்வியலோடு ஒத்ததாய் அதன் வெளி யீடாய் இயற்கையின் அமைதி பெற்றிருக்கிறது. அதனாலேயே அது, திருந்திய அமைப்புடையதாகவும் வாழ்க்கையியற்கைக்கு ஏற்றதாகவும் திகழ்கிறது.

முப்பது ஆண்டுகளுக்கு முன் கழகப் பதிப்பாகத் தொல் காப்பியம் முழுதும் உரைக்குறிப்பு எழுதி ஒவ்வொரு நூற் பாவுக்கும் தலைப்புகளிட்டுப் பதிப்பிக்கவும் அதற்கு ஒரு பதிப் புரை எழுதவும் எனக்கு வாய்ப்பு நேர்ந்தது; பதிப்புரையில்,

"எழுத்தாயினும் சொல்லாயினும் பொருளாயினும் எல் லாம் உயிர்களின் வாழ்க்கை முறையைப் போலவே உயிர்த்திறம் விளங்க இயற்றப்பட்டிருக்கின்றன.

"உயிர்மெய் எழுத்தும் அதன் இயக்கமும் என்றால், உண்மையில் உடம்போடு கூடிய ஓர் உயிரைப் போலவும், அதன் இயக்கங்களைப் போலவுமே இலக்கணம் காட்டப் படுகிறது.

"பெயர்ச் சொல்லும் அதன் வேற்றுமையும் என்றால், நேரில் மக்களைப் போலவும் அவர்தம் வேறுபாடுகளைப் போலவுமே விளக்கங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன.

"பொருளதிகாரத்திற் காணப்படும் அகப்பொருள், புறப் பொருள் இலக்கணங்களேயன்றிச் செய்யுளிலக்கணந்தானும் மக்களின் வாழ்க்கை நிழலே என்னும்படி நுட்பம் விளங்கத் தெளிவுறுக்கப்பட் டிருக்கின்றன. வெண்பா யாப்பு எனில், மக்களுள் உயர்ந்தாரது ஒழுகலாற்றுப் போக்கில் ஓசையும் பொருளும் நடையும் உடையதாய்த் தொல்காப்பியத்தில் அது பெருங்காட்சி அளித்து மகிழ்விக்கின்றது" என்று ஒரு பகுதி

வருவது, தமிழ்மொழியின் அமைப்பு, வாழ்க்கையியலோடு மிகவும் ஒத்தமைந்து, அனைவர்க்கும் வழி காட்டுவதாய்த் திகழ்வதை நினைவூட்டும்.

மெய்யுணர்வியலோடு பொருந்தி அதன் அடிப்படையாய், நல்வாழ்க்கைக்கு வழிகாட்டுவதாய், இயற்கை முதன்மொழியாய்த் தமிழ் திகழ்வதனுல், அது, அதன் வெளிப்பாட்டில், இயற்கைச் சிவசமயத்தைப்போல் இயற்கைத் தமிழ்மொழியாய் முழுமையாகவே தோன்றியதென்று தெளிந்துகொள்ளலாம்.

மேனுட்டாசிரியர் சிலர் கூறுவதுபோல், படிப்படியாய் அது தோன்றவில்லை; 'முதலில், சைகைகளாகவும், பின்னர்ச் சில முதல் ஒலிகளாகவும், அதன் பின்னர்ப் பல எழுத்தொலிகளாகவும் வழங்கிப் பலகாலம் வடிவு கொள்ளாமலிருந்து, முடிவில் வரிவடிவுகளும் படிப்படியே கொண்டன' என்பது தமிழுக்குப் பொருந்தாது; ஒருகால் வேறு மொழிகள் அவ்வாறிருக்கக் கூடும்.

உயிர்களைப் பற்றிய படிமுறை ஆராய்ச்சிகளும் அத்தகையனவே; 'முதலில் கல்லில் உயிரணுக்கள் இருந்து, பின்பு நீரிலும் அதன்பின் நிலத்திலும் தோன்றி, நாற்கால் விலங்காய்க் குறுக்கிலிருந்து உயிர் வாழ்ந்து, பின்பு நிமிர்ந்து மனித உருத் தோன்றியது' என்பதும் பொருந்தாது. ஆறறிவுயிர்களும் முதலிலேயே தோன்றி, அவை மேன்மேல் பிறப்பதும் நிகழ்தலே இயல்பு!

இறைவன் உலகைப் படைத்தான் என்னுங் கொள்கையை ஒப்புக்கொள்வதானுல், படிப்படியே இறைவன் படைக்கின்ருன் என்பது எவ்வாற்ருனும் இசையாது; இறைவனும் படிப்படியே அறிவு வளர்ச்சி பெறுகின்ருன் என்பது போதரும்; இக்கொள்கை, தெய்வ நம்பிக்கையும் மெய்யுணர்வியல் மாட்சியும் கொள்ளாதவர் கொள்கையாய் முடியும்; விஞ்ஞானம் என்பது இயற்கையின் வழியதாயினும் மாறுதற்குரியது; கலை உயிர்ப்புடையது.* மொழிவயப்பட்டது கலை; மொழி, கொள்கைத் திறம் அமைந்தது; கொள்கைக் கலை உறுதி மிக்கது.

இருந்தும், வளர்ச்சி முறை இன்னும் என்ருகுமோ என்று கொள்கை அறுதியின்றிச் செல்கின்றது! தொல்காப்பியர் வகுத்த ஆறறிவு உயிர் விளக்கமும் நிலைக்காது; மெய்யுணர்வியலோடு இவை சற்றும் பொருந்தவில்லை.

---

*Victor Hugo: 'Art and Science' pp. 78. 9.

''என்று நீ, அன்று நான், உன் அடிமை''

என்னும் தாயுமானுர் போன்ற சான்ருேர் வாக்கும் புரைபடும்.

மக்கள் அறிந்தது படி முறையே தவிர, இயற்கையில் எழுந்தவை படி முறைகளில் அல்ல; அதனுலேதான், சிவ சமயத்தையும் அதன் அடிப்படையில் வாழ்க்கை வழிகாட்டி யாய்த் திகழும் தமிழ் மொழியையும், எல்லாம் வல்ல இறைவனே படைத்து வழங்கினுன் என்று கூறும் வழக்கம் ஏற்பட்டது.

''தமிழ் இன்ன காலத்திலேதான் தோன்றியதென்று கட்டுரைத்துச் சொல்லல் இயலாது; பழைய நாளில் இவ் வுலகமெங்கனும் பரவியிருந்த பெருந்தொகையினரான நாகரிக நன்மக்களால் வழங்கப்பட்டது''.

(உரைமணிக்கோவை, பக். 64.)

சைவசமயம் என்பது, இவ்விந்திய நாடு எங்குமுள்ள தமிழ் நன் மக்களால் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தொட்டுக் கைக்கொள்ளப்பட்ட கடவுட் கொள்கை.''

(சைவசமயத்தின் தொன்மையும் தனிச்சிறப்பும்)

குழந்தைகளின் மழலை மொழிகள், மொழி முழுதும் அறிய வில்லை என்பதற்காக, மொழியே அப்போது இல்லையென்று கூறமுடியுமா? மக்களிற் பெரும்பாலார் உலகு முழுதும் அறியாததற்காக உலக நாடுகளே இல்லையென்று சொல்ல முடியுமா? அமெரிக்காவையும் நிலா மண்டலத்தையும் காணுத தற்கு முன் அவையிரண்டும் பிறவும் இல்லை எனலாமா? காட்டு மக்கள் வாழ்க்கை, நாகரிகமற்ருேர் வாழ்க்கை, இப்போதும் இந் நூற்ருண்டிலும் இல்லையா? அதுபோல, முனிவரும் அந்தணரும் அடியார் பெருமக்களும் தொன்மையிலும் இருந் திருக்க முடியாதா? உலகியற்கையில் மண், நீர், தீ, வளி, வான் என்னும் ஐம்பெரும் பொருள்களும் படிமுறையில் தோன்றியவை யென்ருல், 'வான்' என்னும் ஐந்தாவது பெரும் பொருளை உலகாயதம் முதலிய சில சமயங்கள் அறியா திருந்த காலத்தில், 'வானம்' என்பது இல்லாமலா இருந்தது? உயிர்கள் நீர் வாழ்வனவா யிருந்தபோது, நிலத்தில் ஏருத நிலையில், நிலப் பகுதியே இல்லையா? அதில் உயிரினங்களே அற்று, வீணுகவா கிடந்தது? மனித்தப் பிறவிக்கு ஐந்து விரல்கள் முதலிய உறுப்புக்கள் உண்டானது படிமுறையில் அமைந்ததுதானு?

முற்றறிவுடைய இறைவன், உலகு முழுதும் உயிர்களின் பிறவி முழுதும் ஒருங்கே படைத்தான் என்பதும், அவற்றின்

பெருக்கம் சிறுக்கம் தொகுப்பு வகுப்பு ஆக்கம் அழிவுகளாக இடையிடையே நிகழ்வனவெல்லாம், முதலில் ஒருங்கு படைத்த தற்கும் கடைசியில் ஒருங்கு அழிவதற்கும் (சர்வ சங்காரம்) மாறுகமாட்டா என்பதும் சமய நெறியினர் தெளிவு.

சிவ சமயம் இயற்கைச் சமயமென்றால், அதன் கொள்கை களும் இயற்கையில் முற்றும் அமைந்திருக்க வேண்டும்; அவற்றை முழுதுமறிந்த அடியார் பெருமக்கள் சிலரும் அன்றே விளங்கியிருக்க வேண்டும். சைவ சமயத்துக்கு அடிப்படைக் கொள்கைகளால் வளர்ச்சி என்பது யாதுமில்லை; மேல் வகை களில் இருக்கலாம்.

ஆதலால், தமிழ்மொழி அமைப்பு, முற்றும் தக்கோர் வழி வெளிப்படுத்தப்பட்டு, அதன் திருந்திய அமைப்பழகை முழு துணர்ந்த சான்றோரும் அன்றே திகழ்ந்திருக்க வேண்டும் என்க.

அல்லாக்கால், ஆய்தவெழுத்து, விந்து மாயையில் தோன்றியதென்பதும், சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை மூன்றிலும் ஊடுருவி மொழி யெழுத்தாய் வாக்கில் வெளிப்பட்டது என்பதும், ஆய்தவெழுத்து அக் காரணத்தால் மூன்று புள்ளிகளைத் தன் வடிவமாகப் பெற்றதென்பதும் பொருந்தாமற்போம்.

இக்காலத்தில் தட்டெழுத்துக்கேற்பச் சில வடிவுகளைத் திருத்தலாம் என்பது மெய்ப் பொருளியலோடு முரணும். இயற்கை அமைப்போடு பொருந்துதலே முதன்மையாகும். அடிகள் கூறுவது :

"தமிழ் நெடுங்கணக்கிலுள்ள எழுத்துக்களைக் குறைக்க வேண்டு மென்றும், அயல் மொழிகளிலுள்ள ஒலிகளைத் தமிழிற் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்றும், அப்போதுதான் தமிழ் வளர்ச்சியடையு மென்றும் கூறுவர் சிலர். நல்லது; தமிழ்ச் சொற்களினாலுந் தமிழ் ஒலியினாலுந் தெரிவிக்கக் கூடாதவை இருப்பினன்றோ அயல்மொழிச் சொற்களையும் ஒலிகளையுஞ் சேர்த்தல் வேண்டும்? உலகத்தில் உள்ள எல்லாப் பொருள் களையும், எல்லா அறிவு இயல்களையும் தமிழ்ச் சொற்கள், தமிழ் ஒலிகள் கொண்டே செவ்வையாகத் தெரிவிக்கலாம் என்பது, யாம் எல்லாத் துறைகளிலும் புகுந்து எழுதியிருக்கும் நூல் களைச் சிறிது பார்த்தாலுந் தெரிந்து கொள்ளலாம்."

(உரைமணிக் கோவை, பக்.67.)

இன்றும் தமிழ்மொழியின் இலக்கணச் சுவைகளைப் பலர் அடிகளைப்போல் அறிந்து சுவைக்கவோ அதன் இனிமையில்

நினைக்கவோ மாட்டாதவராய்த், தமிழரிலேயே வறியராய்க் காலங் கழிக்கின்றனர். அத்தகையோர்க்குமுன்னும் இறைவனையே போலத் தமிழ்மொழி தன் முழு அமைப்போடும் இனிது விளங்கிக் கொண்டேதான் இருக்கிறது. "ஓர் எல்லையறு பரம்பொருள் முன் இருந்தபடி இருப்பதுபோல்" என்றூர் பிறரும். தமிழ்மொழியின் தனிச் சிறப்பு இது தமிழ் நெறிக் கொள்கையாகிய சிவ சமயத்தின் தனிச் சிறப்பும் இது.

முயற்சி வேண்டும் :

தொன்மையாகவே இயல்பில் அமைந்துவிட்ட இத்தனிச் சிறப்புக்களை, மங்காமல் பயன் கொள்வது அவரவர் முயற்சியில் உள்ளது. ஒரு காலத்தில் மங்குதலும் மற்ருெரு காலத்தில் விளங்குதலும் மக்கள் முயற்சிகளால் நேர்வன. தமிழ் மொழிக்கும் சிவ சமயத்துக்கும், இயற்கையில், கருத்துக்களால் குறைவில்லை; தமிழர் முயற்சிகளின்றிச் சோம்பிக் கிடந்தால் அச் சோம்பலால் அவை மங்கிக் கிடக்கின்றன. மாணிக்க மணிகளைக் கழுவி வைப்பதும் பொன் அணிகளை அவ்வப்போதும் மெருகேற்றி வைப்பதுமான முயற்சிகள் இல்லாவிட்டால், இயற்கையில் ஒளி வாய்ந்த அப்பொருள்கள் மங்கியே கிடக்கும்! கிடைத்தற்கரிய வாழ்க்கை வழிகாட்டிகளான சிவசமயமும் தமிழ் மொழியும் எவ்வளவோ நிறைவுடன் இம்மை அம்மைப் பயன்களாக இயற்கையே கிடைத்திருந்தும், தமிழ் மக்கள் வறிதே முயற்சியின்றிக் கிடந்தால், அவை மங்காமல் தம் இயற்கை யொளியுடன் சிறப்பது எப்படி?

இரங்கத்தக்க இந்நிலையை உணர்ந்த ஆசிரியர் மறைமலை அடிகள் போன்றூர், தக்க முயற்சிகளுடன் அவ்விரண்டையும் ஒளி விளக்கி வைத்து இனிமை யேற்றி உதவினர். தமிழகமும் தமிழக அரசும் அப்பெரியோர்க்கு என்ன கைம்மாறு செய்ய இயலும். வையகமும் வானகமும் ஆற்றல் அரிது. தமிழ் மறையே இங்ஙனங் கருதியது; ஏனென்றல், இவை செய்யாமற் செய்த உதவிகள்.

## இலக்கிய இனிமை

இலக்கணம் அமைந்தது இலக்கியம்; இலக்கணத் தமிழை மேலுஞ் சுவையூட்டி இலக்கியம் சிறக்கும்; இலக்கணம் அமையாத நிலையில், மொழியைச் சிலர் கையாண்டால், இலக்கியமாக அது நிலைபெருது. பேச்சு வழக்கில் பலவகையாகத் திரிபுகளும் மருஉக்களும் உண்டாகக் கூடும்; திருந்திய இலக்கண அமைதி கொண்டு ஆன்ருேர் அவ்வப்போதும் நூல்

களை ஒழுங்கு படுத்தா விட்டால், மொழி பலவகையிற் சிதைந்து முன்பின் நூல்களின் பொருள் அறிய முடியாமல் வழக்கு வீழ்ந்து கெடும்.

"மொழி...அநாகரிகமுடைய மக்களால் வழங்கப் படுவ தொன்றாயின் அதன்கட் காலந்தோறும் பிறந்த சொற்கள் எல்லாம் ஒருங்கு மறைந்தழிய அம் மொழியும் நாளடைவில் இறந்தொழியும்"

(பண்டைக்காலத் தமிழரும், பக். 10.)

மொழியை உயிர்த்திறமாக்கிக் கொண்டிருப்பது அதன் இலக்கணம் என்று துணியப்படும். இலக்கணத்தை வைத்துக் கொண்டுதான், மேலும் சுவை பெருக்கிக் கொண்டு இலக் கியங்கள் எழும். சங்கம் இருந்து அவ்வப்போதும் நூல்களை இலக்கணங்களால் திருத்தி இலக்கியங்களாக்குதலே, தமிழுக் குத் திருத்தம் என்பது! தமிழ் அத்தகைய இலக்கணத் திருத்தம் உடையது; அதனாலேதான் தமிழ் 'சங்கத் தமிழ்' எனப்பட்டது; ஏனை மொழிகளுக்கு இவ்வாறு பெயர் இல்லை.

"கூடலின் ஆய்ந்த ஒண்தீந் தமிழ்" என்பது திருச்சிற்றம் பலக் கோவையார்; அத்தகைய முயற்சி, கட்டுப்பாடாய், நெறிப்பட்ட முறையில், இப்போது உள்ளதா? "ஆய்ந்த ஒண் தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ, அன்றி ஏழிசைச் சூழல் புக்கோ, இறைவா, நின் தடவரைத் தோட்கு என்கொ லாம் புகுந்து எய்தியதே" என்பது அச்செய்யுளின் பின் வரிகள்; உடம்பும் இளைக்கும்படி ஈடுபட்டுச் சுவைக்கும் செய்தியும் இச் செய்யுளில் வருகின்றது.

இலக்கணம் பால்; இலக்கியம் என்பது மேலும் சுவை யூட்டும் சர்க்கரை போன்றதென்றால், பாலை வைத்துக்கொண்டு தானே சர்க்கரை இடமுடியும்!

தமிழ் மொழிக்கு இங்ஙனம் திருந்திய இயற்கையமைப்புச் சிறப்பாக அமைந்திருப்பதனால் மேன்மேலும் சுவையூட்டிய இலக்கியங்கள் இம்மொழிக்கு நன்கமைந்துள்ளன. நல்ல பால், நல்ல சர்க்கரை! இவ்வினிமைகள் தக்கோரைப் பெரிதுங் கவர் கின்றன.

உரைநடையாகவும் செய்யுள் நடையாகவும் தோன்றும் இலக்கணத் தமிழ்மொழி, கறந்த பாலாகவும் காய்ச்சித் திரட்டிய திரட்டுப் பாலாகவும் ஆசிரியரடிகள் கூறுதலை,

"பால், கறந்த மாத்திரையே உண்பார்க்குச் சுவை பயக்கு மாயினும் அதனை வற்றக் காய்ச்சிக் கட்டியாகத் திரட்டிப் பின் உண்பார்க்குக் கழிபெருஞ் சுவை தருதல்போல"

என விளக்குதல் கொண்டு அறிந்து கொள்ளலாம். அதில் சர்க்கரையும் இட்டால் இன்னும் எப்படி யிருக்கும்!

"பாட்டெல்லாம் அறிவு நிலையைப் பற்றிக்கொண்டுபோய் உயிர்களின் உணர்வு நிலையை எழுப்பி விடுவதாகும்"

(பட்டினப்பாலை. பக். 7.)

நானல்வகைச் சுவை:

1. இலக்கியம் என்னுஞ் சொல் குறிக்கோள் (லட்சியம்) அமைந்தது என்னுஞ் சொற்பொருள் உடையது; குறிக்கோள் இல்லாத நூல் எதுவும் இலக்கியமாகாது; இதற்கு அடுத்த படிதான் ஏனைச் சுவைகளெல்லாம்! வாழ்க்கையின் வடிப்பே பாட்டும் உரையுமான நூல்களாய் எழுதலின், வாழ்க்கையே குறிக்கோள் உடையதாக அமையாவிட்டால், அது நல்வாழ்க்கை யாகுமா? "குறிக்கோள் இலாது கெட்டேன்" என்றார் அப்பர்.

செய்யுள் நூலேயாயினும் உரைநடை நூலேயாயினும் அவற்றின் குறிக்கோள், அறம், பொருள், இன்பம், வீடு; வாழ்க்கைக்கும் குறிக்கோள் அவையே!

"அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே"

சிலப்பதிகாரம் அறத்தை நிலைநாட்டும் குறிக்கோள் உடையது; அறத்தின் வழிப் பொருளும் இன்பமும் வீடும் பயப்பிப்பது; குறிக்கோள் சிறப்பாக அமைந்ததாகலின் தமிழில் அது சிறந்த இலக்கியமாயிற்று.

"அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற் றாவதூஉம்,
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்,
ஊழ்வினை உருத்துவந் தூட்டு மென்பதூஉம்,
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி காரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்"

என இளங்கோவடிகள் தமது சிலப்பதிகார நூன்முகத்தில் நூலின் குறிக்கோள் இன்னதென்பதைக் குறித்தார்.

ஆசிரியர் மறைமலையடிகளாரும், "சிலப்பதிகாரத்தில் கிளக்கப்படுவன யாவும் உண்மைப் பொருள்கள்" என்று 'நக்கீரனார் தெய்வப்புலமை மாட்சி' என்னும் கட்டுரையில் கூறுவர்.

2. அறம் பொருள் முதலிய மெய்ப்பொருட் சிறப்பையே தலைப்புகளாக உடையது திருக்குறளாதலின், அது சிறந்த குறிக்கோளுடன் மறையிலக்கியமாய்த், தலைமை பெற்று விட்டது. அவ்வாறு வேறு நூல் தமிழ்க்கு அமையவில்லை.

"மறைந்த தமிழ் மறைகளையே, இறைவன், மக்கள் உய்ய வேண்டி, ஆசிரியர் திருவளளுவ நாயனர் வாயிலாக வெளிப் படுத்தருளினன்.

"வேதம் என்னுஞ் சொல் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள்களைக் கூறும் நான்கு தமிழ் வேதங் களையே உணர்த்தலும்.

"பண்டைக் காலத்தில் தமிழில் வழங்கிய நான்மறைகளே நால் வேதங்கள் எனக் கூறப்பட்டன.

"சிவபிரான் ஆலின் கீழிருந்து அறம் பொருள் இன்ப வீடு களை அருந்தவருக்கு அறிவுறுத்திய அருமறைகள் தமிழ் நான் மறைகளேயாம்;......இந் நால்வகை உறுதிப் பொருள்களைச் சிறக்கக் கூறும் திருவள்ளுவர் திருக்குறள், 'மறை' எனவும் 'வேதம்' எனவும் பண்டு தொட்டு இன்றுகாறும் வழங்கப் படுதலுங் காண்க."

(வேளாளர் நாகரிகம், பக். 102, 96-71, 109, 113.)

3. அறம் முதலிய நான்கையும் ஆலின் கீழிருந்து சிவ பெருமான் உணர்த்தினன் என்பதனல் அக் குறிக்கோளுடைய திருமுறைகளும் உயர்ந்த இலக்கியங்களாயின.

திருக்குறள் திருமறையும், தேவார திருவாசகத் திருமுறை களும் இவ்வாற்ருல் ஒரே முடிபுகளுடையன; திருமறை, வேதம்; திருமுறைகள் ஆகமங்களாகும்; ஒன்று பொது, மற்ருென்று சிறப்பு; 'பொது மறை' 'சிறப்பு முறை' என்றும் சொல்லலாம். இரண்டன் முடிபும் ஒன்றே; இது,

வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்,
ஓதும் பொதுவும் சிறப்புமென் றுள்ளன;
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்,
பேதம தென்பர் பெரியோர்க்கு அபேதமே!

என்னும் திருமூலர் வாக்கினல் இனிது தெளியப்படும்;

4. சங்க இலக்கியங்கள் அவ்வளவும் அறம் முதலிய கொள்கைகளைப் பெருக உடையன என்பது அனைவரும் அறிந்ததே!

5. ஆசிரியரடிகளின் நூல்கள், சிவநெறி தமிழ் மொழிச் சிறப்புகளை விளக்குதலும், அவை இரண்டாலும் மக்களுக்கு வாழ்க்கை அறத்தின் முறைகளைத் தெரிவித்தலும், குறிக்கோ ளாகக் கொண்டு இயன்றவையாதலின், அவை யத்தனையும் இலக்கியச் சிறப்புக்குரியனவாய் மிளிர்கின்றன.

"மக்கள் கூட்டத்தாரின் நாகரிகமெல்லாம் அவர் வழங்கும் மொழியினால் நன்றாக அறியப்படும்...நிலையான நாகரிகமும் நிலையான வாழ்க்கையும் நாளுக்கு நாள் பெருகும் அறிவு விளக்கமும் அரிய முயற்சியுமுடைய மக்களிடத்தல்லாமல் மற்றவர்பால் ஒரு மொழி சிறந்து தூய்தாய்த் தொடர்பாய் நடைபெறாது...மக்களின் முயற்சியால் ஒரு மொழியானது உரம் பெற்று உயிர்ப்புடையதாய் வழங்குதல் போலவே, திருந்திய மொழி வழக்கினாலும் அம் மக்கள் உரம் பெற்று உயிர்ப்புடன் நடைபெறுவர்.

"மொழியானது அம்மொழியை வழங்கும் மக்களின் கொள்கைகளை விட்டுத் தனித்து நடவாது.

"தமிழ்மொழியின் உண்மை, அதனை வழங்கி வளர்த்த தமிழ் மக்களின் கொள்கையாகிய சைவத்தைத் தனக்கு உயிராய்க் கொண்டு உலவுகின்றது......பண்டைக் காலம் தொடங்கித் தமிழை வழங்கினவர்களும் வளர்த்தவர்களும் சைவர்களே அல்லாமல், மற்றைய மதத்தவர்கள் அல்லர்.

"தமிழுக்கே உரிய தமிழ் மக்கள் சைவர்களாயிருந்தமையால், அவர்கள் அதனைத் தூயதாகவே வழங்கி வளர்த்து வந்திருக்கிறார்கள்; அதனாற் சைவக் கொள்கையானது தமிழுக்கு உயிர்போல்வது; அதனை அதிலிருந்து பிரித்தல் இயலாது.

என்று தமிழ்மொழியும் சைவசமயமும் ஒன்றுக் கொன்று தொடர்புற்று மக்கள் வாழ்க்கையோடு பிணைந்து விளங்குதலை அடிகளார் நன்கெடுத்துக் காட்டுவர்."

(உரைமணிக் கோவை, 61, 75, 76)

இலக்கியச் சுவைக்கு இரண்டாவது வகை:

தொல்காப்பியர், சில மெய்ப்பாடுகளைப் புலப்படுத்தி அவை எட்டென்றும் வகைப்படுத்து,

> "நகையே, அழுகை, இளிவரல், மருட்கை,
> அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்று
> அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப" (தொல், மெய்ப். 3)

என்று ஓதுவர்; எட்டும் மெய்ப்பாடுறும்படி நூல் யாத்தால் அது அடுத்தபடி இலக்கியச்சுவை உடையதாகும்.

திருவாசகம் ஓதினால், "தொடு மணற் கேணியிற் சுரந்து நீர் பாய" என்று சிவப்பிரகாசர் கூறியபடி, மெய்ப்பாட்டுச் சுவை தருகின்றது; திருவாசகம் அருளிய மாணிக்க வாசகரை 'அழுதடி அடைந்த அன்பன்' என்பார் பரஞ்சோதியார்; இவ்வாதலால், திருவாசகம் ஓர் இலக்கியமாயிற்று.

ஒவ்வொரு சுவையோ, அன்றிச் சில சுவைகளோ, எண் வகைச் சுவையுமோ இனிதமைய யாக்கும் நூல்கள் இலக்கியங்க ளாகின்றன; இச் சுவைகள் விளங்கும் வாழ்க்கையே இலக்கிய மாய் (இலட்சியம் உடையதாய்த்) திகழ்தலின், அவ் வாழ்க்கை யின் வடிப்பாகிய நூலும் இலக்கியமாய்ச் சுவைக்கிறது.

சுவை, உலகியலில் எங்கும் விளங்குவதொன்று, ஒரு குழந்தையை ஓரிடத்துக்கு அனுப்பினல் அது வளைந்து வளைந்து ஆடிக் கொண்டே ஓடுகிறது; நேராய்ப் போய் நேராய் வருவதில்லை; அதன் நடை, சுவை வண்ணமாகிறது; இதை அக் குழந்தைக்கு யாரும் சொல்லிக் கொடுப்பதில்லை; இயற்கை யாகவே உள்ளது.

உள்ளத்திற் கிளர்ச்சி தோன்றினல் இத்தகைய சுவைத் திறங்கள் மேலெழுந்து விடுகின்றன; உள்ளக் கிளர்ச்சியும் உணர்ச்சிப் பெருக்கும் எழுகின்ற பாட்டு வல்லான் ஒருவன், இங்ஙனமே இலக்கியப் பாடல்களைப் பொழிந்து விடுகிறன்; தன்னை மறந்து நாட்டியமாடும் ஒரு மாதின் நிலையும், இங் ஙனமே அமைகிறது; வெறும் உடம்பு இலக்கியம் பெறுகின்ற போது அதன்கண் மெய்ப்பாடுகள் தோன்றி விடுகின்றன. உடம்பிலும் உலகத்திலும் எவ்வளவு இலக்கிய இனிமைகள் இங்ஙனம் காணப்படுகின்றன.

உயிருடம்பில் எண்வகைச் சுவையாகக் காணப்படும் இலக் கியம், உலகத்தில் எத்தனையோ வகையான அழகுகளாய்த் தோன்றுகின்றன. அவை அத்தனையும் எல்லாம் வல்ல இறைவி யின் நாட்டிய மெய்ப்பாடுகளே. இறைவன் திருநடன இபக் கமே. திருமுறை இலக்கியங்கள் உலகியற்கைகளை விரித்தோது தலில் இம் மறைபொருள் அடங்கியிருக்கிறது.

''பயன்படாது நிற்குஞ் சொல் ஒன்றுபினும...காணப்படுவ தில்லை...

''மாம்பழச் சாறு பெய்த குடுவையின் எப்பக்கத்தே பொத் திட்டு நாவை நீட்டினும் அவ்வழியே ஒழுகும் அச் சாறு தித்தித்தல் போல, செய்யுளின் எவ்விடத்தே அறிவு தோயினும் ஆண்டு இனிமையே விளையாநின்றது.''

(பட்டினப். பக். 76, 77)

'கற்பனை' என்பதும் மூன்றுவதாய்க் கருதப்படும் ஓர் இலக்கியச் சுவை :

திருவள்ளுவர், நிலையாமை பற்றி, 'நேற்றிருந்த ஒருவன் இன்று இல்லை, இறந்துபோனன்' என்று ஒரு கருத்தைத்

தெரிவிக்க விரும்பினர். அதை அப்படியே தெரிவித்திருந்தால் வெறுங் கருத்தைத் தெரிவித்ததுபோல் ஆகும். படிப்பவர் சுவையோடு படிக்கமாட்டார்; 'இது யாருக்குத் தெரியாது' என்று புறக்கணிப்பாகக்கூட இருந்துவிடுவர். ஆனால், அதைச் சுவையுடன் சொல்லத் திருவள்ளுவர் உள்ளம்பற்றி, 'உலகுக்கு ஒரு பெருமை உண்டென்றால் அது இந்த நிலையாமைதான்' என்று சொல்ல முற்பட்டார்; கேட்பவர் உள்ளம் 'அப்படியா' என்று கவிந்தது;

> "நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
> பெருமை யுடைத்திவ் வுலகு"

மற்றப் பெருமைகள் சில உலகத்துக்கு இருந்தாலும், இந்த நிலையாமைதான் அதற்குப் பெரிய பெருமை என்று கற்பித்து, உள்ளதைப் புனைந்துரைத்தார்.

உள்ளதை இங்ஙனம் கவர்ச்சிபெறச் சொல்லுதலைத்தான் பெரும்பாலுங் 'கற்பனை' என்றனர் முன்னோர். இல்லாததைப் படைத்துச் சொல்லுதலை, அஃது எத்துணைச் சுவை தருவதாயினும், 'பொய்' என்று தெரிந்ததும் உலகம் பழிக்குமே தவிரப் புகழாது.

'முயற்கொம்பின்மேல் ஒருவன் ஏறி வானத்திலுள்ள தாமரைப் பூவைப் பறித்தான்' என்பதுபோல, இல்லாததைக் கவர்ச்சியாக்க முற்பட்டால் அது சுவைக்குதவாது; வெறும் பகடியாய் ஒழியும்; முயல், கொம்பு, ஒருவன், வானம், பூ, பறித்தல் என்னுங் கருத்துக்கள் உலகத்தில் உள்ளனவே. இவற்றை, ஒன்றின்மேல் ஒன்றாக ஏற்றி இயைத்துரைத்தது தான் பொய்; இப் பொய்யும் பொய்மைக்கே காட்டப்படும்; சடுதியில் அது சுவையுடையதுபோலத் தோன்றினாலும் நிலைக்காது; சுவையிலும் பொய்யாகவே ஒழியும்; பொய்யை இயைப்பது ஒரு திறமைதான் என்றாலும், அத் திறமை, திருவள்ளுவர் போல, மெய்யையே சுவைபடச் சொல்லப் பயன்படுவதில்லை; பொய்மைக்கு மட்டும் இதனைப் பொய்ச் சுவையாய் எடுத்துக்காட்டும் போது, இது, கற்பனைச் சுவைக்கு ஒரு வழுவமைதியாய் உதவும்.

தலைவன்மேல் குற்றமில்லாததைக் குற்றமாகக் கொண்டு தலைவி ஊடுவது வழக்கம்; மெய்ப்படாத இதனைத் தலைவன், 'அப்படி நான் குற்றஞ் செய்யவில்லை' என்று கருத்தளவாய்த் தெரிவித்தால் அது சுவை பயக்காது; இக் கருத்தை இலக்கியச் சுவை ஏற்றி இனிமையாகச் சொல்லவேண்டும். அதற்குப் புலமை வேண்டும்; புலவர் திருவள்ளுவர்க்கு அவ்வாறு இனிமைப்படுத்துவது எளிதாயிற்று. பொய்யைப் பொய் என்றுங்

காட்டவேண்டும், அதே நேரத்தில் அதைக் கற்பனையால் சுவைப்படுத்தியும் சொல்லவேண்டும்; மெய்க் காட்சியைச் சுவைப்படுத்துதல் ஒரு திறன் என்றால், இல்லாததை இல்லாத முறையிலேயே சுவைப்படுத்துதலும் ஒரு திறனாகும்; தெய்வத் திருவள்ளுவர்க்கும் இது மாட்டாமை யாகுமா?

> "வழுத்தினாள் தும்மினே னாக, அழித்தழுதாள்
> யாருள்ளித் தும்மினீர் என்று"

என்றார்; திருக்குறள் இலக்கியமாய் விட்டது.

பேரறிஞர்க்கே இவ்வாறு பொய்மை முறையிலேயே இனிமைப்படுத்த முடியும்; இதனைப் 'புலன் நெறி வழக்கம்' என்று முன்னோர் பாராட்டினர்; இதன் திறன், மெய்யை மெய்யாகவும் பொய்யைப் பொய்யாகவுமே சுவைபடச் சொல்லுதலாம்; மெய்யைப் பொய்யாகவும் பொய்யை மெய்யாகவும் சொல்லிப் பகடிபண்ணுதலன்று. தும்மினால் வேறொருவர் நினைக்கின்றார் என்பது ஒரு குருட்டு வழக்கு; புரைக்கை ஏறுதல் வேறு.

மேலும், அவ்வத் துறையில் இதற்கு ஆழ்ந்த புலமை வேண்டுமாதலின், இச் சுவைத்திறன் 'கற்பனை' எனவும் கூறப்பட்டது! 'புனைவது' எனவும் சொல்லப்படும்; உள்ளதை உள்ளதாகவும் இல்லதை இல்லாததாகவும் இனிமையாய் அணி செய்யுந் திறனை ஈதுணர்த்தும் "இல் வழக்கை உள் வழக்காகக் கருதிப் புலந்தாள் என்பதாம்" என்றார் உரையாசிரியர் பரிமேலழகரும்.

இவ்வாறு சுவைப்படுத்துவது பயன்படுவதற்கேயல்லது வேறில்லை; பழங்களைப் போல் சில காய்கறிகளைப் பச்சையாய் உண்ண முடியாது; ஆதலால் சமையல் தொழில் வாழ்க்கையில் அருப்பியது; அத் தொழிலில் ஒரு மாது திறமையாய் அக் காய்கறிகளைச் சுவைப்படுத்துதல் இரைப் பையில் சென்று அக் காய்கறிகள் பயன்படும் பொருட்டேயாம். அறியாமையில் வீழ்ந்து கிடக்கும் மாந்தர் அறிவைப் பெற வேண்டுமானால், வெறும் அறிவுரைகளோ குறிக்கோளுரைகளோ போதா; அவற்றைச் சுவைப்படுத்தி இலக்கியச் சுவையுரைகளாகச் சமைத்து வழங்கினால், அவ்வறியாமை மாந்தர் அவ் விலக்கியச் சுவையில் ஈடுபட்டு அம் முறையில் அறிவுரைகளையும் ஏற்று அறிவுடையராவர்; பயன்படுவது மருந்தேயானாலும் அதனைச் சுவையூட்டிக் கொடுப்பதுபோல் இக் கற்பனைச் சுவை மாந்தரிடையே அறிவுப் பெருக்கத்துக்கு இன்றியமையாததாயிற்று.

நான்காவதாக உவமை நலனும் சிறந்த இலக்கியச் சுவையாய் எண்ணப்படுகின்றது; இலக்கியச் சுவைகளுக்காக ஆசிரியர்

தொல்காப்பியனார் வகுத்துக்கொண்ட இனிமைகளில், மெய்ப் பாட்டியலைச் சேர்ந்த எண்வகைச் சுவைகள் மேலே காட்டப் பட்டன; அணிவகைகளில் உவமை நலன் ஒன்றே ஆசிரியரால் எடுத்துக்கொள்ளப்பட்டது.

நூலாசிரியர் தாம் கூறுதற்குக் கருதிய ஒரு கருத்தோடு, உலகத்தில் ஒத்திருக்கும் மற்றொரு கருத்தை உவமை காட்டி விளக்கும்போது தெளிவு உண்டாகின்றது; தெளிவு பிறவாத படி கூறுதல் சுவைப்பதற்கு மாறு என்று தெரிகின்றது.

நூல் பயில்வதெல்லாம், உணராத பொருள் உணர்ந்து அறிவு பெறுதற்கும், உணர்ந்த பொருளை மேலும் அழகுறக் கண்டு இன்புறுதற்குமேயாம்''

(முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்)

விளக்கத்துக்காகவே நூல் எழுதுதல் வழக்கமாதலின், அதனை விளங்காதபடி கடுமையான எழுத்து நடையிலும் தெளி வற்ற கருத்திலும் எழுதுதலால் யாது பயன்? எதுவும் விளங்கும் போது ஈடுபாடும் அதனால் சுவையும் தோன்றுகின்றன; அவ் வாற்றால் விளங்க வைத்தலே நோக்கமாகக் கொண்ட உவமைகள் இலக்கிய அணிகளில் சிறந்தன வாயின.

அத்தகைய சிறப்புக்குரிய உவமைகளை ஆசிரியர் பொருத்த மாகக் கையாள வேண்டும்; கருத்துக் கேற்ற உவமையாய், ஒத்திருக்க வேண்டும்; அத்தகைய உவமைகள் பலவற்றுள் உயர்ந்ததையே மேற்கொள்ள வேண்டும்; உயர்ந்ததற்கு உயர்ந்ததையும், தாழ்ந்ததற்குத் தாழ்ந்ததையும் முதற் பொரு ளுக்கு முதற் பொருளையும் கிளைப் பொருளுக்குக் கிளைப் பொருளை யும் உவமித்தல் பொருத்தம்; பொதுவாகத் 'தலைமைப்பாடு' 'அறத்திறன்' 'அன்புச் சிறப்பு' 'ஆற்றல் விளக்கம்' முதலியன தோன்ற, உவமைகளைத் சேர்ந்துகொள்ள வேண்டும்; உள்ளுறை உவமங்கள் அறிவுப் பெருக்கமும் சுவை மிகுதியும் தரும்; இவையெல்லாம், தொல்காப்பியர் காணும் சுவை முறைகள்!

மாந்தர், தமது நிலையிலிருந்து தாழும் கீழ் நிலைமையைத் தெய்வத் திருவள்ளுவர் விளக்க விரும்பினார்;

> "தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
> நிலையின் இழிந்தக் கடை"

என்று (மானம், 4) அதற்கு ஓர் உவமை தேர்ந்து கூறினார். கீழ் இயல்புக்கேற்ற கீழான உவமை! திருக்குறள் இலக்கியமாதற்குக் கேட்க வேண்டுமா? அடிகள் கருத்துக்கள் :

"பொருள்களைக் கிடந்தவாறே சொல்லிக் கொண்டு போம் நெறி 'தன்மை நவிற்சி'; அங்ஙனம் சொல்லிப் போதற்க இடையிடையே உணர்வு சலியாமைப் பொருட்டுச் சுவை வேறு படுத்தி அப் பொருளோடு இயைந்த பிற பொருட்டோற்றத்தை எழுப்பு நெறி உவமை உருவகம்."

"திங்கள் வானில் விளங்குகின்றதென்று ஒருவன் உரைத்தால் அவ்வுரை நம் அறிவுக்கு ஓர் உண்மையை அறிவிக்கும்; அவ்வாறன்றிக்,

> 'கொழுந்தா ரகைமுகைக் கொண்டலம் பாசடை விண்மடுவில்
> எழுந்தார் மதிக்கமலம் எழில்தந்தென'

என்னும் திருச்சிற்றம்பலக் கோவையார் திருப்பாட்டை உரைப்பக் கேட்டால்,

"விரிந்த நீலவானம் என்னும் நீர்மடுவில் முகிற் குழாமாகிய பச்சிலை பரவியிருப்ப, இடையிடையே வான்மீன்களாகிய வெண்டாமரை அலர்ந்து அழகுடைத்தாய்த் தோன்றுகின்றது' என்னும் இச் செய்யுட் பொருள், நம் அறிவுக்குப் புலனாதலோடு......உணர்வினையும் எழுவித்து இன்பந் தருதல் கண்டாம்.

"உவமை உருவகம் முதலியவற்றின் வேறாகப் பிறர் ஆயிரம் புனைந்துரைகள் கூறினாராயினும், அவையெல்லாம் இவ்வுவமை உருவகம் என்னும் இரண்டிலே அடங்கும்.

"புலவர்க்கு இயற்கையாய்த் தோன்றும் ஒப்புமைகள், உவமை உருவகம் என்னும் இவ்விரண்டே."

(பட்டினப் பாலையில்) கஞ்சி உலர்ந்து புழுதியாய் மேற்படிந்த அரண்மனை வீடுகளுக்கு, வெண்ணீற்றிற் புரண்டெழுந்த களிற்றியானைகளையும்; கடற்றுறை முகத்தில் அசைந்து கொண்டிருக்கும் மரக்கலன்களுக்கு, கட்டுத்தறியை அசைக்குங் களிற்றியானைகளையும் போல இருபது உவமைகளை உருத்திரங் கண்ணனார் என்னும் நல்லிசைப் புலவர் காட்டியிருக்கின்றார்.

(பட்டினப்பாலை. பக். 54-8)

ஐந்தாவதாக அகச்சுவை :

வாழ்க்கையில் அறிவு அன்பு அருள் அறம் என நால்வகை முன்னேற்றங்கள் உயிர்களுக்குக் கூறப்படும்.

(1) கருவிகளில் ஒடித் திரும்பும் உயிரறிவு 'அறிவு' எனப்படும்.

(2) திரும்பிக் கருவிகளைக் கடந்தபின், திருவருள் பெருக மின்னி நண்ணுதலால் உயிரறிவு நிலைமாறி அருளுடைமையை (உயிரிரக்கத்தை நோக்குவது 'அன்பு'.

(3) அவ் வுயிரிரக்கப் பண்பால் (சீவ காருணியத்தால்) தொண்டுகள் நிகழ்ந்து, திருவருளைக் கழும எய்தி அதன் வண்ணமாதல் 'அருள்'.

(4) திருவருள் வண்ணமான நிலையில், பற்றுக்கள் முற்றும் அற்று இறைவன் வயமாதல் 'அறம்'.

இந்த அறநிலையில் வயங்கும் நீத்தாரே (சீவன் முத்தரே), அறன் வலியுறுத்துக்கொண்டு. பிறவியில், இறைவன் திருவுள்ளப்படி சேவையில் நிறைந்து பிறங்குவோர்.

இவ்வுயிர் முன்னேற்றங்கள், முறையே சீலம் நோன்பு செறிவு அறிவு (சரியை கிரியை யோகம் ஞானம்) எனவும், அறம் பொருள் இன்பம் வீடு என நான்கு வகையாகவும், நான்கு மறைகளாகவும் விளக்கப்பட்டன.

திருஞானம், ஓங்கிய ஞானம், கலைஞானம், மெய்ஞ்ஞானம் எனத் திருஞான சம்பந்தர் சீகாழியிற் பாலுண்டு எய்திய நால்வகை ஞான நிலைகளெல்லாம், அறம் என்னும் ஞான நிலைகளின் படிமுறைகள்! ஆதலால், அறிவு நிலையிலேயே அறம் தொடங்குகிறது. கடைசியில், நிறைந்த அறமாய் (இறையின்பமாய்) முழுமையடைகிறது!

மேலே காட்டப்பட்ட நான்கில், அறிவுபுறம்; அன்பு அருள் அறம் என்பன அகம்; இந்த அகச் சுவையே இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ் ஓம்; (சதாசிவ தத்துவம்); இச் 'சதாசிவ தத்துவத்தி'லிருந்து அ, உ, ம் என்னும் அறம் பொருள் இன்பமாகிய முப் பொருளும் இவற்றின் பயனாகிய வீடும் என நால் வேதங்கள் தோன்றின.

அன்பு அருள் அறம் என்னும் முறைமை முறையே இன்பமும் பொருளும் அறனும் உணர்த்தும்; இங்கே 'அருள்' என்றது, உலகியலின் மறைப்பம்மை (திரோதாயி)யையும் உட்கொண்டு திருவருளை (சிவ சத்தியை) உணர்த்துதலின் உலகியல் பொருட் செல்வத்தைக் குறித்து நின்றது! இவ்வாற்றால் அன்பு முதலிய மூன்றும் உலகியல் (இம்மை) நடைமுறையைக் காட்டும்; தொல்காப்பியம் இலக்கணங் கூறுதலின், இம்மையை முதன்மையாகக் கொண்டு மறுமையுணர்வை உள்ளடக்கி, "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு" என உலகியலில் (இம்மையில்) நிகழுமாறே வாழ்க்கையிலக்கணங் கூறியது! திருக்குறள் மறை நூலாதலின், இம்மையும் மறுமை

நோக்கத்துடன் நடைபெறுதற்கேற்ற முதன்மை தேற்றி, மறுமையில் இம்மையை அடக்கி, அறம் பொருள் இன்பம் என்னும் முறைமையை முதலிலேயே முறைப்படுத்து விளக்கி, 'பொருளும் இன்பமும் அறத்தாற் கடக்க' என்னுங் கருத்தை வலியுறுத்தி ஆலின் கீழ் இறைவன் உரைத்தது போலவே அறம் உரைத்தார் திருவள்ளுவர். திருக்குறள், 'மறைநூல்' என்பதற்கு இம் முறைமையே சான்று; இந் நூலுக்கு இந் நோக்கம் இருப்பது, பாயிரத்தில் திருவள்ளுவர் கூறுகின்ற

> "அறஆழி அந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லால்
> பிறஆழி நீந்தல் அரிது"

என்னும் கடவுள் வாழ்த்துப் பாட்டாலும் அதன் உரையாலும் தெளியலாம்.

திருக்குறள் இங்ஙனம் திருமறை நூலாய்த் திகழ்தலால், ஏனையோர் போலத் தமிழ் அன்பரும் அதனை வெறும் இலக்கிய நூல் என்றோ, வெறும் நீதிநூல் என்றோ கூறுதல் எவ்வாற்றானும் பொருந்தாது; திருக்குறளின் இயல்பினை நன்கறிந்தவர் அதனை 'மறைநூல்' என்றே போற்றுவர்!

நல்லொழுக்கம் என்பது இது; புறத்திலிருந்து அகம் திரும்பும்போது, சுருங்கல் அழகு அமைவதனாலும், அகத்துக்கு அகமாய் (உயிரினுள் உயிராய்; உயிரன்பினுள் திருவருளாய்) விளங்கும் திருவருட் சுவையை உயிருணர்வு உணர்தலாலும், அதனால் இறையின்பம் ஏற்படுவதனாலும், அகந் திரும்பும் இலக்கியச் சுவையை நூல்களும் மொழியும் பெறுகின்றன.

இவையெல்லாம் பற்றி அடிகளார் உரைப்பன வருமாறு:

"நல்லிசைப் புலவர் நம் அறிவை ஒருமைப்படுத்து விளக்குமாறு போல் பிறர் அங்ஙனம் செய்யமாட்டுவாரல்லர்.

"ஓரிடத்திலும் நிலைபெறுதலின்றிக் குரங்குபோல் ஓடுதலாலன்றோ நம் அறிவு விளக்கம் அடைதலின்றி மழுங்கியே கிடக்கின்றது; அறிவு விளங்காது மழுங்கிக் கிடக்குமாயின், அதன் மேற்பட்ட உணர்வு எழப்பெறுதல் ஒருவாற்றானும் இல்லை.

"நல்லிசைப் புலவரும் ஒரு நிலையின்றி ஓடும் நமதறிவை ஓர் ஒழுங்குபடுத்தற் பொருட்டு, அவ் வறிவு பற்றிச் செல்கின்ற உலகியற் பொருள்களில் அழகு மலிந்து விளங்குவனவற்றை அவை விளங்குமாறே விரித்துக் கூறி அவ் விரிந்த அறிவைச் சிறிது சிறிதே சுருக்கிக் கொண்டு போய் அகமுகப்படுத்தி உணர்வெழச் செய்து (அன்பெழச் செய்து) இன்பத்தின்கண் இருத்துவர்.

"சிறந்தன சிலவற்றைப் பற்றுமாறு செய்யப்பட்ட மாத்திரையானே, அஃது, அப் பழக்கம் தவிர்ந்து அகமுகப் பட்டு ஒருங்கும்.

"காணவும் கருதவும் உரைக்கவும் படாத முதல்வனோடு ஒற்றித்து நின்று அவனை அனுபவித்தல், அவன்போற் காணவும் கருதவும் உரைக்கவும் படாத உணர்வு நிலை (உயிரன்பு நிலை) ஒன்றற்கு மாத்திரமே வாய்ப்பதாம்."

(பட்டினப்பாலை. பக். 6, 16)

"தமிழர்க்குள்ள பெருமையெல்லாம் அவர் தோன்று தொட்டுத் தூய்தாக வழங்கிவரும் தமிழ்மொழியினையே சார்ந் திருக்கிறது"

(வேளாளர். பக். 119-20)

"சொல்லாட்சிகள் முக் காலத்து மில்லாத வெறும் பொருளைக் குறிப்பன அல்ல;"

(உள்ளது போகாது இல்லது வாராது)

ஆறுவதாகச் செய்யுட் சுவை :

இவ் வகையில் இலக்கியச் சுவையாகப் பல கூறப்படுதலும் கவனித்தற்குரியது.

(1) உணர்ச்சி மிகுந்து பாட்டு வெளிப்படுதலால், அவ் வுணர்ச்சி மனவுணர்ச்சியாலன்றி உயிருணர்ச்சியாயிருக்க வேண்டும். 'செய்யுட்கள் அகத்தைத் தொடுத'லென்றும் இதனைக் கூறுவதுண்டு. அகமாரக் கருதுதலால் இச் சிறப்பினைப் பெறலாம். இதனால். உண்மைத் திறமும் மிகும்; காவும் ஒழியும்; இந் நிலையில், பிறர்க்கும் உண்மையுணர்ச்சி தோன்றிச் சுவை மிகுக்கும்.

(2) ஒலியினிமையும் கருத்தினிமையும் பாட்டில் இடங் கொள்ளும்; "கொழுஞ்சுவை கெழுமிய செழுந்தமிழ் வழக்கு" எனவும், "என்பு நெக்குருகும் இசையுடன் தழீஇ" எனவும், அடிகள், பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை முகப்பில் உரைப் பாயிரத்திற் கூறுவார்; அவர் வாய்மொழிகள் மேலும் சில.

"நம் அறிவு மெல்லோசை வழிச் சென்று உருகி மிகவும் தூயதான மேலுலகத்தில் உயரப் போகின்றது; நீர் மடையிலே தெள்ளத் தெளிந்த அருவிநீர் திரண்டு ஒழுகுதல் போலச் செய்யுளோசையும் மெல்லென்று மொழு மொழுவெனச் செல் கின்றது.

"இயற்கையிலே இசை தழுவாது நடப்பன......உணர்வை எழுப்புமாறு எவ்வாற்றானுமில்லை."

(பட்டினப்பாலை. பக். 9, 76)

அரிய பொருளும் அழகிய பொருளும் நுவலப்படுங்கால் அவற்றின் இயல்புக் கிசைந்த சொற்கள் ஓர் இழையில் முழு மணிகள் கோக்கப்பட்டாற்போல் கவினுறப் போந்தமைய உருவானும் உள்ளுறை பொருளானும் அறிவும் இன்பமும் மேன்மேற் பெருகச் செய்வதே ஒரு விழுமிய நூலின் தன்மை''

(முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்)

ஒலி இனிமையும், கருத்தினிமையும், இலக்கியச் சுவை பெருக்குவன. 'வண்ணம்' 'வனப்பு' என்பனவும், 'அளபெடை' 'சாரியை' என்பனவுமாக வரும் தொல்காப்பியப் பகுதிகளை இங்கு நினைவு கூர்க.

''இன்னோசை'' என்பது சொற்களின் சொற்றொடர்களின் ஒலி இனிமைகள்; இன்றைக்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன் அடிகள் எழுதியருளிய திருவொற்றிமுருகர் மும்மணிக் கோவைக்கு நான் வகுத்த விளக்க உரையில் அடிகள் சில திருத்தங்கள் செய்து பதிப்பிட்டார்கள்; அத் திருத்தங்களுள், ''சொற்களையும் சொற்றொடர்களையும் செந்தமிழ்ச் சுவை துளும்ப மாற்றியதும்'' ஒன்று; சொற்களை இனிமையேற்றிச் சுவையாய் எழுதி இன்புறுதல் அடிகளார்க்கு இயற்கையில் அமைந்துவிட்ட தமிழ்த் திறன்! அது, பிறர் எவர்க்கும் அமையாதது; அடிகள் 'எழுத்து நடை'யைப் பற்றி எழுதுங் கட்டுரையில் அது விளக்கப்படும். ஆயினும், இங்கொன்று காட்டிச் செல்லலாம்!

> ''பவளவாய் மடுத்துத் திவளொளி சிறந்து
> பழகுறு தந்தைக்கு மழவிடை யயர்ந்த''

என்னும் வரிகளின் ஒலியினிமை, அடிகள் தம் இளமையில் இயற்றிய திருவொற்றி முருகர் மும்மணிக் கோவைச் செய்யுளில் (6:46-7) வருகின்றது; இவ்வாறே பிறவும்.

(3) இலக்கியங்களில் வெளிப்படும் சொற்கள், தக்கனவாய் எப்போதும் மரபு தழுவியே அமையும்; மாத்திரை முதலான செய்யுளுறுப்புக்களும் பெரும்பாலும் ஒத்தே வரும். எல்லாவற்றாலும் இனிமை நோக்கு எங்கும் பொருந்திக் கிடக்கும்.

மரபு கழன்றால் மொழிச்சுவை மாறும்; ''மாற்றருஞ் சிறப்பின் மரபு'' என்பதும், ''மரபு திரிதல் செய்யுட்கில்லை'' என்பதும் தொல்காப்பியம் (மரபு 1, 91); இனிமை செய்ய உயர்ந்தோர்க்கே தெரியுமாதலின் மரபு வழக்கு உயர்ந்தவரால் அமைந்ததென்பதையும் இலக்கியச் சுவையாளர் கவனித்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால், ''மரபு நிலைதிரியின் பிறிது பிறிதாகும்'' ஆதலால் ''மரபு திரியா மாட்சிய வாகி'' (தொல், மரபு 92, 94) நூல்கள் விளங்க வேண்டும்; மரபு தழுவுதலால் இலக்கியங்கள் இனிமை ஏறும்.

"தமிழ்ச் சொற்கள் திரிபடையாமலும் அயன்மொழிச் சொற்கள் விரவுதலால் தன் சொற்கள் இறந்துபடாமலும் வழங்கி வருதலாலன்றே......முன்னரே தமிழ் மொழியில் எழுதப்பட்ட நூல்களை நாம் இன்றைக்கும் எளிதிலே கற்றறியப் பெறுகின்றோம்"

('பண்டைப் புலவர் தமிழ் ஓம்பினமை')

ஆசிரியர் மறைமலையடிகள் தொல்காப்பியச் சுவையில் மிதந்தவர்; சங்க இலக்கிய இனிமைகளில் ஆழத் திளைத்தவர். அவர் எழுத்துக்களும் பேச்சுக்களும் இலக்கிய நயம் மிக்கவை; இன்சுவை செறிந்தவை.

"நூல்கள் திரிபடையாத தமிழில் எழுதப்பட்டிருப்பதால் தான் இப்போதும் நாம் அவைகளை எளிதில் கற்று, நம் முன்னோர்களின் உயர்ந்த சிறந்த கருத்துக்களை அறியப் பெறுகின்றோம்...........முன் இயற்றப்பட்ட திருக்குறளை நாம் இப் போது எளிதிற் கற்றுணர்தல் போல இக்காலத்து ஆங்கில மொழியைக் கற்பவர்கள் ஐந்நூறுண்டுகட்கு முற்பட்ட 'சாச'ருடைய நூல்களையும் முந்நூறுண்டுகட்கு முற்பட்ட 'ஷேக்ஸ்பிய'ருடைய நூல்களையும் எளிதில் கற்றறிதல் கூடுமோ?......'சாசர்' எழுதிய நூல்களையும் 'ஷேக்ஸ்பியர்' எழுதிய நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவ்வுண்மை நன்கு விளங்கிவிடும். செந்தமிழ் மொழி ஆருயிரம் ஆண்டுகட்கு மேலாக நம் முன்னோர்களால் திரிபடையாமல் பாதுகாக்கப்பட்டு வந்தது.

"'கால்டுவெல்' முதலான மேனாட்டாசிரியர்கள்,......... தமிழானது பிறமொழிக் கலப்பின்றித் தூயதாக எழுதப்படும் போதும் பேசப்படும்போதும் மிக்க அழகுடையதாய்ப் பிறர் உள்ளத்தைக் கவருந் தன்மையதாய் விளங்குகின்றது என்றும் வலியுறுத்திச் சொல்லியிருக்கின்றார்கள். அவர்கள் சொல்லிய அவ்வுண்மை எல்லாப் பொருள்களையும் தனித்தமிழில் எடுத் துரைக்கும் 'திருக்குறள்' என்னும் ஒருநூலைப் பார்த்தாலும் நன்றாகத் தெரிந்துகொள்ளலாம்".

(உரைமணிக். பக். 64-66.)

## மெய்ப்பொருள் இனிமை

இவ்வினிமை எல்லையற்றது; எஞ்ஞான்றும் புதுப்புது நுகர்வாய் இன்புறுத்திக்கொண்டிருப்பது; சேக்கிழார் பெருமான் இதனை "என்றும் இன்பம் பெருகும் இயல்பு" என்பார்; "இன்பமே எந்நாளும்! துன்பமில்லை" என்பது அப்பர் தெளிவுரை!

"கற்பதை ஆழ்ந்து கற்பதனால், இம் மெய்ப்பொரு ளின்பம் காணலாம்". "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்"

என்பதனால் இது தெரிகிறது; கற்பதென்பது ஆழ்ந்து கற்பது தான்; அச் சொல்லுக்கு அதுதான் பொருள். அதனாலேதான் 'கற்றதனா லாய பயன் மெய்ப்பொருள் காண்பது' என்று தமிழ் மறைக் குரவர் கருதினர்.

கற்பதற்கு உலகியற்கை இருக்கிறது; அதைப் பிழிந்து கொடுக்கும் நூல்களும் உள்ளன; அவற்றில் மெய்ப்பொருள் இரண்டற்ற கலப்பில் (அத்துவிதமாய்க்) கலந்திருப்பதனாலே தான் ஆழ்ந்து கற்றால், கலந்திருக்கும் மெய்ப்பொருளிருப்பினை அறிவாற் காணவும், அகம் திரும்பி அன்பினால் உணரவும், உணர்ந்து ஈடுபடவும் முடியுமென்பதற்கு "வாலறிவனைக் காண முடியும்" என்று மட்டும் கூறாமல், நன்கு அன்பினால் ஈடுபடவும் கூடுமென்பது தோன்ற "நற்றாள் தொழாஅ ரெனின்" என்று சொல்லித் திருவள்ளுவர் தொழுதலையும் நினைத்தார்.

மெய்ப்பொருளின் இயல்பென்பது பயன்படும் தன்மை; இத்தன்மை அமையாத மனிதரோ, அவர் சாணும் பொருளியல்புகளோ வீண்; இயற்கையின் உண்மை விஞ்ஞானமென்றால், அதை இனிமைப்படுத்தும் மெய்ச்சுவையாகிய கலைத்திறம் பயன்படுதலி லுள்ளது! இது தமிழ்க் கொள்கை; தமிழினிமை; தமிழ்ச்சுவை!

அடிகளார் இச் சுவையே உருவானவர்; அடிகளிடம் பாடங் கேட்டு நான் தெரிந்துகொண்ட தமிழ், இப் பயன்படும் மெய்ச் சுவைதான்; அடிகள் தம் வாழ்க்கையினாலேயே இதனை விளக்கினர்; சொல்லால் மட்டுமன்று;

எளியேனால் அவர்கள் அடைந்த நலம் யாதுமில்லை; ஆனால், அவர்களால் நான் அடைந்த தமிழ் நலம் பெரிது! பெரிது! "அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன், யாது நீ பெற்றதொன்றென்பால்" என்னும் திருவாசக வரிகள் என் நினைவுக்கு அடிக்கடி வரும்.

அப்படி அடிகளார் வாழ்க்கை மெய்ச்சுவை மிக்கது. உண்மையான இனிமைத் திறம், தீந்தமிழினிமை, சைவ மெய்த் தன்மை செறிந்தது; பிறர்க்குப் பயன்படும் செய்கைகளையே எந்நேரமும் நாடி அவர்கள் வாழ்க்கை இயங்கி வந்தது!

அவ்வாறு மெய்ப்பொருளைக் காண்பதே கல்விக்குப் பயனாதலின், மெய்ப்பொருள் தோன்றும்படி நூல்களியற்றுதல் முக்கியமாகின்றது; அத்தகைய நூல்களே தக்கவை; அதனால் திருக்குறள் "கற்பன கற்றபின்" எனவும் அருளும். 'கசடறக் கற்றல்' ஐயந் திரிபுகள் எழாதபடி ஆழ்ந்து ஆராய்ந்து முடிவுகள் அமையும்படி கற்றலாகும்; அப்படி அடைந்தால் மட்டுமே,

'நிற்க அதற்குத் தக' என்னும் அறிவுரைப்படி, செயலுக்கு வரும் போது ஐயந் திரிபுகள் உண்டாகாமலிருக்கும்; மெய்ப்பொரு ளமைப்பு அமையாத உலகியற்கை உயிரியற்கைகள் இல்லாமை யால், அவற்றை வடித்துக் கூறும் நூல்கள் மெய்ப்பொருள் அடிப்படையைக் கட்டாயம் பெற்றிருக்க வேண்டும்; அவைதாம் கற்கத் தகுந்த நூல்கள். அவ்வுண்மையை உணர்ந்து, அதற் காகவே தமிழ்ச் சான்றோர் மெய்ப்பொருளியற்கைகள் விளங்கத், தமிழ்ச் செய்யுள் உரை நூல்கள் இயற்றியுதவினர். ஆதலால், 'தமிழ்ச் சுவை' என்பது இம் மெய்ப்பொருட் சுவையே!

நூலில் மெய்ப்பொருள் அடிப்படை இல்லையென்றால், ஏனை இலக்கண இனிமை, இலக்கிய இனிமைகள், ஏறியிருந்தாலும் அதனைத் தமிழ்ச்சுவை நூலென்று பாராட்டுதற்கில்லை. வெறும் இலக்கண நூல்கள், வெறும் இலக்கிய நூல்கள், வெறும் கலை நூல்கள், நூலென்னும் பெயர்க்கேற்றபடி, மாந்தர் நினைவு உரை செயல்களை ஒழுங்குபடுத்தும் நூல்களாகா. ஒருமுகப் படுத்தித் தூய்மை செய்யாத நூல்கள் பயனற்றவை.

வெறும் உலகியலின்பம் நிலையாதவையாதலின், திரு வள்ளுவர் கருத்துப்படி அவையெல்லாம் புல்லறிவென்று பொத்துப்படும்.

> "நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை"

என்பது அப்பெருமான் அறிவுரை! இத்தகைய புல்லறிவாண்மை ஆறறிவு படைத்துச் சிந்தனையாற்றல் வாய்ந்த மாந்தர்க்குச் சற்றுமாகாது; அவரெல்லாம் சான்றாண்மை பெற்றுப், பிறந்த பிறவியை மாட்சிமை செய்துகொள்ளுதற்குரியர்.

இம் மெய்ப் பொருள் இனிமையாகிய தமிழ்ச் சுவையை மிக நன்றாக நுகர்ந்து இன்புறுவார் ஆசிரியரடிகளார்! அவர் நுகர்வு இத்தகைய தென்பதை அவர் தமிழ்ச்சுவை எழுத்துக்கள் விளங்கக் காட்டும்:

"முழுமுதற் கடவுளுண்டென்பதனை விளங்க அறிவித்தற் குரிய அறிவுநிலையும் பின் அதனோடு வேறறக் கலந்து இன்புறு தற்குரிய உணர்வுநிலையும் என்னும் இந்திற நிலையினையும் பயிலச் செய்து, தூய அன்புருவாய் விளங்கும் உணர்வு நிலையை நிலைபேறுக்குவித்து,

"உயிர்களுக்கு அளந்தறியப் படாத பெரும்பயனைத் தருதற்கு இன்றியமையாக் கருவியாவதுதான் பாட்டு என்பது.

"எங்கே உண்மைத் தன்மை விளங்கித் தோன்றுமோ அங்கே நம் அறிவு ஊன்றி நிற்றல் கண்கூடாய் அறியப்பட்ட தொன்றும்.

"சொற்கள் கொண்ட பொருட்கருவை அறியப்புகுவான் ஒருவன், தன்னறிவால் அதனைக் கூர்ந்தறிய வேண்டுதலின், தன்னறிவு மிக நுணுகப் பெறுதலோடு.........வியப்பும் உடனெய்தி,......அதன்கண் ஓரின்பம் தோன்ற, அதன் வயப்பட்டுச் சிறக்கின்றான்.

"சில் சொல்லிற் பல்பொருள் தேற்றி அறிவை நுணுகச் செய்து அவ்வாற்றால் உணர்வெழுச்சிபெறச் செய்தல் நன்கு தெளியக் கிடந்தது.

"இதனோடு...இன்னோசை நலந் தழுவி வாய்ப்புறச் சென்று......இன்புறுத்தும்."

(பட்டினப்பாலை. பக். 6, 8, 13, 15)

இனி, மெய்ப்பொருள் என்பது குணநலன்; இக் குணநலனை இலக்கண இலக்கியக் கலைநூல்களிற் காணலாமென்றால், இயல்புகள் தனியே அமைவன அல்ல; ஒரு பொருளின் இயல்பாகவே அவை அமைய முடியும்; இன்ன பொருள் இன்ன இயல்புடையதென்பதே இயற்கை; இயல்பமையாத பொருளோ, பொருளமையாத இயல்போ உலகியற்கையில் காண இயலாது; கற்கண்டு என்னும் ஒரு பொருளைக் கொண்டுதான் அதனியல்பாகிய இனிமையை அறிய முடியும்; பொருளை அடையாமல் அதன் பண்பை அடைய முடியாது; அதுபோல நிலையான மெய்ப்பொருளாகிய கடவுளை அடையாமல் அதன் தெய்வ குணங்களை அடைதலும் இயலாது.

*"இன்னா தம்ம இவ்வுலகம்,*
*இனிய காண்கஇதன் இயல்புணர்ந் தோரே"*
*"பெரியோரை வியத்தலும் இலமே,*
*சிறியோரை இகழ்தல் அதனினு மிலமே"*

என்பவை போன்ற தெய்வ குணங்கள், தெய்வத்தை உணர்ந்து எய்தினார்க்கன்றி எல்லார்க்கும் நுகர்ந்து கூறல் இயலாது. ஆகவே தமிழ்ச்சுவை என்பது தமிழில் அமைந்த மெய்ப்பொருட் சுவையாகிய கடவுட் சுவையேயாம்.

அடிகளார்க்கு நற்றமிழ்ச் சுவை அமைந்ததென்றால், அடிகளார், இறைவனைத் தம் உள்ளகத்தும் புறத்தும் எய்திய பேருளாளர் என்பதை நாம் உணர்ந்து பெருமையுறல் வேண்டும். அத்தகைய மெய்ச்சான்றோர் திருவடிக் கீழ் அமர்ந்து, பல ஆண்டுகள் தீஞ்சுவைத் தமிழ் பயில நேர்ந்தமை, அடியேன் பெற்ற பெரும் பேறு!

### எல்லாம் இனிமை

இதற்கு, அடிகளார் வாழ்க்கையே முற்றும் இனிமையாதல் வேண்டும்; ஆம், உண்மை; நடை, உடை, பண்பு, இடம்,

பொருள், ஏவல், உண்ணல், பருகல், உறங்கல்) முதலிய அனைத்தும் ஓர் ஒழுங்கு முறையில் அடிகளார் வாழ்க்கையில் இனிமை கனிந்திருந்தது; எங்கும் இனிமை; எதிலும் இனிமை; காலையில் துயிலெழுவதிலிருந்து நள்ளிரவில் துயிலப் போகும் வரையில், எல்லாரும் யாரும் சுவைக்கும் வகையில் இனிமை திகழ்ந்தது!

வருவோரை வரவேற்று இருக்கையில் அமர்வித்து அமர்ந்து பேசும் இனிமை, எவ்வளவு துரிதத்திலும் கையெழுத்து ஆங்கிலமாயினும் தமிழாயினும் எழுத்துக்கள் ஒன்றோடொன்று கலவாமல், மணி மணியாய்ச் சொல்லுக்குச் சொல் இடம் விட்டு, அச்சில் விளங்கும் எழுத்தமைவு போல் திருத்தமாய், மீண்டும் படி எடுக்க வேண்டிய கட்டாயம் நேராத படி, நேர் நேராய், ஒரே தடவையாய் எழுதும் இனிமை, அமர்ந்து நிமிர்ந்து சற்றும் அசைவின்றிப் பெருநூல்களை ஆழப் படித்துப், படித்தவரையில் தெளிவாய் உணர்ந்துகொண்டதற்கு அடையாளமாகவும் நினைவுக்காகவும் ஓரங்களில் கோடுக ளிட்டும், குறிப்புகள் கொடுத்தும், விரிவாய் இருந்தால் வேறு நோட்டில் கருத்துகள் எடுத்தும் கற்கும் இனிமை, கற்கும் ஒவ் வொரு நூலுக்குத் தாமே அட்டைகளிட்டு அவற்றை ஒழுங்குபடப் பேழைகளில் அடுக்கி வைக்கும் இனிமை, எங்கும் எப்போதும் எவையும் தூய்மையும் அழகும் தோன்ற அவ்வவற்றை அவ்வவ் விடங்களில் நிறுத்தி, ஓவியம் போல, ஒரு கண்காட்சி நிலையம் போல அமைத்து உள்ளக் கிழியில் எழுதிப் பார்க்கும் இனிமை, அவைக் களங்களில் நின்றும், இடையிடையே அமர்ந்தும், சுவை பெருக்கிப் பேசும் இனிமை, சுவைத்துச் சுவைத்துப் பால் பருகும் இனிமை, உண்ணும் எதுவும் அங்ஙனமே சுவைத்துண்ணும் இனிமை, உடுக்கும் காவி ஆடையை அழகுறக் கட்டி வழி பாட்டில் அமரும் இனிமை, நெற்றியில் திருநீறும் சந்தன குங்குமங்களும் அணியும் இனிமை, எல்லா நடைமுறைகளையும் ஒரொழுங்கிற் படுத்து, எந்த நேரத்தில் எந்தப் பணி செய்தல் என்ற முறையில், அந்த நேரம் சற்றும் பின்னிடையாமல், காலந்தோறும், கருத்தாகவும், அதனை ஒரு முதன்மையாகவும், கொண்டு ஒழுகிவரும் இனிமை என எல்லாம் கவர்ச்சியாக அடி களார் வாழ்க்கையில் சுவை மலிந்து காணப்பட்டன.

எனது நீண்ட காலத் தொடர்பில் அடிகளார் மாளிகைக்கு எத்தனையோ முறை முன்னறிவியாமல் சென்றதுண்டு; அடிகள் இன்ன நேரத்தில் இன்னது செய்துகொண்டிருப்பார் என்பது எல்லார்க்கும் திட்டமாய்த் தெரியும்; ஒரு காலத்திலாவது, நான் சென்ற தடவைகளில், நூல்கள் இறைந்து சிதறிக் கிடந்தது

கிடையாது; இல்லத்தில் எப்போதும், அதுவேலை நேரமாயினும் அல்லாத நேரமாயினும்; எந்தத் தட்டுமுட்டுக்களும், பொருள்களும் இடம் மாறிச் சிதர்ந்து அலங்கோலமாய்க் காணப் பட்டதே இல்லை.

இவ் வினிமைத் திறத்தில் அடிகளார் மிகவும் கண்டிப்பானவர்; அடிகள் குடும்பமோ பெரிது; அனைவரும் அடிகளார் பார்வையில் ஒழுங்குற இயங்கி வந்தனர்; அடிகளார் கண்காணிப்பில் மற்றவர்களும் அப்படி நடந்து கொள்ளுதலில், எவ்வளவோ விழிப்பான திருத்தங்கள் வேண்டப்படும்; மாணவர்களும் இதற்கு விலக்கல்லர்; ஒருகால் என்னைத் தாழ்வாரத்திலேயே அரைமணி நேரம் ஒதுக்கித் தேம்பித் தேம்பி அழ விட்டார்கள்.

கண்டிப்பாய் இருக்கும் அடிகள், அனைவர் மாட்டும் அன்புச் சுவை பெருக்குதலிலும் மிக வல்லவர்கள்; அழுது கொண்டிருப்பவர்களை அப்போதே நகைக்க வைத்து விடுவார்கள்; வியக்கவும் வைப்பார்கள்; அஞ்சவும் மகிழவும் வைப்பார்கள்; தாழ்வுகளை இகழ்ந்தொதுக்கவும் உயர்வுகளிற் பெருமிதங் கொண்டு முன்னேறவும் வைப்பார்கள். நடுநிலைமையில் நேர்மை கொள்ளவும் பழக்குவார்கள்.

எழுத்துக்களில் பேச்சுக்களில் மட்டுமன்றி வாழ்க்கையிலேயே இலக்கியம் (இலட்சியம்) ஆக்குவார்கள். அவர்கள் வாழ்க்கையில், 'இலக்கண வாழ்க்கை' 'இலக்கிய வாழ்க்கை' 'மெய் வாழ்க்கை' ஏனைச் சுவைகளின் வாழ்க்கை, எல்லாமே காணப்பட்டன. வாழ்க்கையே சுவைத்திறம் மிகும்போது எல்லா இனிமைகளும் நடுவு நிலைமையும் அமைவது இயற்கை.

கையில் ஒரு பண்டம் இருக்கும்போது மற்றொரு பண்டம் எடுத்தலாகாது. கையிற் காசிருக்கும்போது, அக்கையினாலேயே, எவ்வளவு துரிதத்திலும், ஒரு புத்தகமோ கடிதத் துண்டோ எழுதுகோலோ எடுக்கக் கூடாது; நழுவுகின்ற ஆடையைக் கூட அந்தக் கையால் பற்றலாகாது; துட்டை ஒருபுறம் வைத்து விட்டே, ஆடையை உடுத்த வேண்டும்; இச் சிறிய வகைக்கே இப்படி என்றால், அடிகள் எவ்வெவ் வகையில் மற்றவைகளைக் கவனித்து ஒழுங்குறத் தொடர்ந்து இனிமைச் சுவையை எழுப்புவார்களென்று உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாற்றால், அடிகளார் வாழ்க்கையே இனிமைச் சுவையாய் மிளிர்ந்ததெனவும், அனைவர்க்கும் இன்னதென்று சொல்ல முடியாத ஒரு கவர்ச்சியும் அன்பும் பெருகி வந்ததெனவும், அறிந்துகொள்ளலாம்.



———

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

(சிலம்பு-௩०, பரல்-௫, ௨௭௪ ஆம் பக்கத் தொடர்ச்சி)

முல்[2]—முன்மைக் கருத்து வேர்ச்சொல்.

தோற்றக் கருத்தை அடிப்படையாகக் கொண்ட இளமைக் கருத்து வேர்ச் சொல்லின் உடனிலைக் கருத்துக்கள், சிறுமை மென்மை அழகு மறம் வலிமை என்பன என்பது, முந்திய கட்டுரையிற் குறிக்கப்பட்டது.

தோற்றமும் இளமையும் ஒருயிரியின் வாழ்க்கையில் முற்பட்ட நிலைகளாதலாலும், தோற்ற மென்பது ஒன்று இன்னொன்றினின்று முன் வருதலாதலாலும், தோற்றக் கருத்தின் வழிநிலைக் கருத்து முன்மை யென்பது அறியப்படும்.

முன்மை யென்பது காலமுன் இடமுன் என இரு திறப் படும். கால முன்மை முதன்மையையும் முதுமையையும் குறிக்கும். முதுமை முதிர்ச்சியில் முற்றும்.

முல்—மூல்—மூலம்=1. விதையினின்று முன்தோன்றும் முளை. 2. முளையின் மாற்றமாகிய வேர். 3. திரண்ட வேராகிய கிழங்கு (பிங்.) "முதிர்கனி மூல முனிக்கண மறுப்ப" (கல்லா. 38). 4. வேரை யொட்டிய அடிமரம். "போதி மூலம் பொருந்தி" (மணி. 26 : 47). 5. அடிப்படை. 6. முதல் (ஆதி). "மூல வோலை மாட்சியிற் காட்ட" (பெரியபு. தடுத். 56). 7. ஐம்பூத முதனிலை (மூலப் பிரகிருதி) "மூலமு மறனும்......கனலும்" (பரிபா. 13 : 24). 8. கரணியம் (காரணம்). "மூல மாகிய மும் மலம்" (திருவாச. 2 : 111). 9. அடிபல மாகிய ஆணவம் "மூலநோய் தீர்க்கு முதல்வன் கண்டாய்" (தேவா. 845 : 9). 10. அடிவாயாகிய அண்டி. 11. அண்டியில் முளைபோல் தோன்றும் நோய். (அக. நி.).

மூலம்—வ. மூல.

மூல்—மூலி=1. மருந்தாக வுதவும் வேருடைய புல் பூண்டு செடி கொடி. "பாதாள மூலி படருமே" (நல்வழி. 23). 2. மருந்துவேர். 3. கரணிய முதல்வன்.

மூலி—வ. மூலின்.

மூலி—மூலிகை=மருந்துவேர். (W.). 2. மருந்து வேர்ச் செடி.

மூலிகை—வ. மூலிகா.

முல்—முன் = 1. முதல். (பிங்.). 2. காலமுன். "பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே" (தனிப்பா.), "யானைவரும் பின்னே, மணியோசை வரும் முன்னே". (பழ.). 3. இடமுன். "என்னை முன் நில்லன்முன் தெவ்விர்" (குறள். 771). "முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்க" (தனிப்பா). 4. அண்ணன். "அறுமுகேசன்முன்" (திருவாலவா. காப்பு. 2). 5. பழமை.

முன்சொல் (பிங்.) = பழமொழி.

ம., க. முன், தெ. முனு.

முன்—முன்னம். "நம்மினு முன்ன முணர்ந்த வளை" (குறள். 1277). க. முன்னம்.

முன்னம்—முன்னர். "வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை" (குறள். 435).

முன்—முன்னை = 1. பழமை. "முன்னைப் பழம் பொருட்கும்" (திருவாச. 7 : 9). 2. அக்கை. "என்ற வன்னை நும்முன்னை" (கம்பரா. மிதிலைக். 124). 3. அண்ணன். (திவா.).

முன்னே—ம., க. முன்னெ.

முன்னன் = அண்ணன். "பெட்பொடு முன்னனைக் காணும்' (இரகு. அவதாரநீங். 13).

முன்னவன் = 1. தேவன். "முன்னவன் போதியில்" (மணி. 28 : 141). 2. சிவபிரான். "முன்னவன் கூடல்" (கல்லா. 32 : 10). 3. அண்ணன். "முன்னவன் வினவ" (கம்பரா. வேள். 4).

முன்னவள் = அக்கை. (பிங்.). 2. மூதேவி. "முன்னவள் பதாகையோடு......வந்துற்றவாபோல்" (கந்தபு. சிங்கமு. 443).

முன்னோன் = 1. கடவுள். "முன்னோன் காண்க" (திருவாச. 3 : 29). 2. குல முன்னைத் தலைவன். "தாதைக் கொன்பது வழிமுறை முன்னோன்" (மணி. 28 : 123. 4). 3. தந்தை. "வாட்குடியின் முன்னோனது நிலை" (பு. வெ. 3 : 13, கொளு.). 4. அண்ணன். "தம்முன்னோர் தந்தை தாய்" (பு. வெ. 9 : 33).

முன்னுதல் = 1. எதிர்ப்படுதல். "கதிர்முலைக் கன்னிமார்ப முன்னினர் முயங்கினலல்லால்" (சீவக. 483) 2. முற்படுதல். "முன்னியாடு பின்யான்......உங்ஙனே வந்து தோன்றுவனே" (திருக்கோ. 16).

முன்தானை—முன்றானை=சேலைக் கடைமுனை. "முன்றானையிலே முடித்தாளலாம்படி" (ஈடு, 1 : 10 : 11).

முன்—முன்பு=(பெ.) 1. முன்னிடம். "தோட்டியான் முன்பு துரந்து சமந்தாங்கவும்" (புறம். 14). 2. முற்காலம். 3. பழமை. (கு. வி. எ).

முன்—முனி=நுனி.

முன்—முனை=1. முன். "அத்தினகரம் அகர முனை யில்லை" (தொல். புண. 23). 2. நுனி. "வெய்ய முனைத்தண்டு" (சீவக 1135, பாட வேறுபாடு). 3. கூர்மை. 4. கடலுட் செல்லும் நீண்டு கூரிய நிலப்பகுதி. 5. முகம். (ஈடு, 10 : 5 : 10). 6. தலைமை (அக. நி).

1. முன்னிலையில். "தலையில் வணங்கவு மாங்கொலோ தையலார் முன்பே" (திவ். திருவாய். 5 : 3 : 7). 2, முன் காலத்தில். "முன்புநின் றம்பி வந்து சரண்புக" (கம்பரா. வாலி வதை. 117).

முன்—முன்று—முன்றில்=வீட்டின் முன்னிடம். "பலவின் கனையுடை முன்றில்" (நற். 77).

தே. முங்கிலி.

முன்றில்—முற்றில்—முற்றம் (முன்றகம்—மூன்றம்—முற்றம்(?)=1. வீட்டு முற்றம். "மணன்மலி முற்றம் புக்க சான்றோர்" (புறம். 178). 2. ஊர் முற்றம். "வஞ்சி முற்றம் வயக்கள னாக" (புறம். 373). 3. பரப்பு. "ஏந்து முலைமுற்றம் வீங்க" (அகம். 51).

முன்று—முந்து, முந்துதல்=1. முற்படுதல். "முதுவருள் முந்துகிளவாச் செறிவு" (குறள். 715). 2. எதிர்ப்படுதல். "முந்தின னருமறைக் கிழவன்" (கம்பரா. தாடகை. 28). 3. விரைதல். "முந்தா நின்ற வேட்கை" (ஞானவா. சுக்கி. 7). 4. மேலெழுதல். "உந்தி முதலா முந்து வளி தோன்றி" (தொல். எழுத். 83). 5. முதன்மையாதல். "அவையின் முந்தி யிருப்பச் செயல்" (குறள். 67). 6. சிறத்தல். 7. பழமையாதல். க. முந்து.

முந்து=1. முற்காலம், "முந்துறை சனகனுதி" (கந்தபு. மேரு. 10). 2 முன்பு. 3. தொடக்கம் (ஆதி), "முந்து நடுவு முடிவு மாகிய" (திருவாச. 18 : 5).

முந்து — முந்தன் = கடவுள். "முந்தனை யான்மா வென்றும்" (சி. சி. 4 : 28).

முந்துநூல்=முன்னூல். "முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" (தொல். சிறப்புப்.)

முந்தி=(பெ.) 1. முன்னிடம். 2. முன்றானை. "பொது மாதர் முந்தியே தொடு மிடங்கள்" (குற்ரு. தல. மந்தமா. 21). 3. (கு. வி. எ.) முற்காலம். "முந்திவா னோர்கள் வந்து" (தேவா. 477 : 8).

முந்து—முந்தை=(பெ.) 1. முற்காலம். "முந்தைத்தான் கேட்டவாறே" (சீவக. 545). 2. பழைமை. (பிங்). 3. முன்னோன். "தந்தைதாயென் றிவர்க்கு......முந்தைவழி நின்று" (பு. வெ. 9 : 33). (கு. வி. எ.) "வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்" (புறம். 10).

முந்தை—முத்தை. முன்னிடம். "முத்தை வருஉங் காலந் தோன்றின்" (தொல். எழுத். 164). க. முந்தெ.

முந்திசினோர்—முன்னோர். "இலங்குகதிர்த் திகிரி முந்தி சினோரே" (பதிற்றுப். 69 : 17).

முந்து+ஈயினோர் = முந்தீயினோர்—முந்தீசினோர்—முந்தி சினோர்.

ஈதல்=இடுதல். 'ஈ' ஒரு துணைவினை. ஒ. நோ : வந்து+இடு=வந்திடு=வந்துவிடு. உரைத்து+இடு=உரைத்திடு.

ஈ—ஈயினர்: (பலர்பால் இறந்தகால வினைமுற்றும் வினையாலணையும் பெயரும்) ஈயினவர்—ஈயினர் (வினையாலணையும் பெயர்)—ஈயினோர்=ஈந்தோர்.

ஒ. நோ : ஆயினர்—ஆயினோர், போயினர்—போயினோர். ஈதல் என்னும் வினை, இவ்வகையில் மூவிடத்தும் துணைவினையாக வரும். முன்னிலையிடத்திற்கு எடுத்துக்காட்டு இறந்து பட்டது. இவ் வாய்பாட்டு வினைமுற்று அல்லது வினையாலணையும் பெயர், தன்மையிலும் படர்க்கையிலும் ஈறு குன்றியும் வரும்.

ஈறு குன்றாது வருவது படர்க்கையிற் பெரும்பான்மை. தன்மையில் ஈறு குன்றாது வருவதற்கு இக்காலத் தெடுத்துக் காட்டில்லை.

எ - டு:

ஈறு குன்ற வினையாலணையும் பெயர் :

"சிறந்திசினோர்" (தொல். உயிர். 93), "அறிந்திசினோரே" (குறுந் 18), "படைத்திசி னோரே" (புறம். 18).

சறு குன்றிய வினைமுற்று தன்மை :

"மெய்தெரி வளியிசை யளவுநுவன் றிசினே" (தொல். எழுத். பிறப். 20).

படர்க்கை. "பாடல் சான்ற விறல்வேந்த னும்மே...... துப்புறுவர் புறம்பெற் றிசினே" (புறம். 11).

நுவன்றியினேன்—நுவன்றிசினேன்—நுவன்றிசினேன்— நுவன்றிசின்.

புறம்பெற்றியினான் — புறம்பெற்றிசினான் — புறம்பெற்றி சினான்—புறம்பெற்றிசின்.

இன்னும் இதன் விரிவைத் தமிழ்நாடு அரசுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியிற் காண்க.

முந்திரி $=\frac{1}{320}$ ஆகிய கீழ்வா யிலக்கம். "முந்திரி மேற்காணி மிகுவதேல்" (நாலடி. 346).

முந்து + இரி = முந்திரி. இரிதல் = விலகுதல், பிளத்தல், கெடுதல். இரிசல் = பிளவு.

ஒ. நோ : பின்னம் = 1. பிளவு. 2. கீழ்வா யிலக்கம். E. fraction, f L. frang, break. கீழ்வா யிலக்கங்களுள் முந்தியது முந்திரி யெனப்பட்டது.

முந்திரி[2] = அண்டிமா (cashew).

முன் + துரி = முந்துரி—முந்திரி. துருத்தல் = முன் தள்ளு தல். (த. வி.) துருத்துதல் = முன் தள்ளுதல் (பி. வி.) முந்திரிக் கொட்டை பழத்திற்கு வெளியே முன்தள்ளிக் கொண்டிருத்த லால், அதன் பழமும் மரமும் முந்திரி யெனப்பட்டன. அண்டிமா என்பதும் இப் பொருளதே. அண்டியில் (அடியில்) கொட்டை யுடைய பழமா அண்டிமா. தே. முந்த மாமிடி.

முந்தூழ் = பழவினை. (W.)

முந்து—முது—முதல் = 1. தொடக்கம் (ஆதி). "முத லூழி யிறுதிக்கண்" (சிலப். 8:1, உரை) 2. முதலிலிருப்பது. "முதல்நீ டும்மே" (தொல். எழுத். 458). 3. கரணியம் (காரணம்) "நோய்முத னாடி" (குறள். 948). 4. மூல கரணிய னான கடவுள். "மூவா முதலாய் நின்ற முதல்வா" (திருவாச. 27: 10). 5. முதலானவன். "முதலாய நல்லா னருளல்லால்" (திவ். இயற். 1 : 5). 6. தலைமை வரிசை. முதன் மாணக்கன். 7. அடைகொளி (விசேடியம்) (சைவப்). 8. மூலவைப்பு. "முத லிலார்க் கூதிய மில்லை" (குறள். 449). 9. வேர். "முதலி

னூட்டுநீர்'' (அரிச். பு. மீட்சி. 17). 10. கிழங்கு. 11. அடிப் பாகம். ''வாடிய வள்ளி முதலரிந் தற்று'' (குறள். 1304). 12. அடிமரம். ''வேங்கையைக் கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை'' (கலித். 38). 13. இடம். ''சுரன்முதன் மராத்த வரிநிழல்'' (சிறுபாண். 8). 14. முதற்பொருள். ''முத லெனப்படுவது நிலம்பொழு திரண்டி னியல்பென மொழிப''. (தொல். அகத். 4). 15. பிண்டப் பொருள். ''முதலுஞ்சினையும்'' (தொல். வேற்றுமை. 6). 16. செலவுக்காகச் சேமிக்கும் பொருள். ''திருப்பூ மண்டபத்துக்கு முதலாக அளக்கவும்'' (S. I. I. iii, 215 : 11). 17. இசைப்பாட்டு வகை. (சிலப். 3 : 41-2, உரை). 18. வணிகப் பண்டக் கொள்விலை. 19. முத லெழுத்து. ''எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே'' (நன். 58).

(கு. பெ. எ.) முதலான. முதலாயிரம்.

(கு. வி. எ.) 1. முதலில். முதல்வந்தவன். 2. கூட. தண்ணீர் முதலாய் இங்கே கிடையாது. (உ. வ.)

(இ. சொ.) 1. 5-ஆம் வே. உருபு. அடிமுதல் முடி வரை (உ. வ.) 2. 7-ஆம் வே. உருபு. ''குணமுதற் றோன்றிய...... மதியின்'' (மதுரைக். 195). க. முதல்.

முதலுதல்=(செ. கு. வி.) 1. முதலாதல். ''முதலா வேன தம்பெயர் முதலும்'' (தொல். மொழி. 33). 2. தொடக்க முடைய தாதல். ''மூவா முதலா வுலகம்'' (சீவக. 1).

(செ. குன்றுவி.) முதலாகக் கொண்டிருத்தல். ''அகர முதல வெழுத்தெல்லாம்'' (குறள். 1).

முதல்வன்=1. தலைவன். ''மூவர்க்கு முதல்வ ரானூர்'' (தேவா. 453 : 2). 2. கடவுள். ''ஞாலமூன் றடித்தாய முதல் வன்'' (கலித். 124). 3. அரசன். (திவா.) 4. தந்தை. ''தன் முதல்வன் பெரும்பெயர்'' (கலித். 75).

முதலவன்=குலமுதல்வன். ''முதலவன் முதலிய முந்தை யோர்'' (கம்பரா. பள்ளிபடை. 50).

முதலோன்=கடவுள். ''செஞ்சடை முதலோன்'' (கம்பரா. நிகும்பலை. 142).

முதலி=1. தலைவன். ''எங்கள் முன்பெரு முதலி யல்லையோ வென'' (பெரியபு. கண்ணப். 177). 2. பெரியோன். ''மூவர் முதலிகளுந் தேவாரஞ் செய்த திருப்பாட்டும்'' (ஏகாம்.

உலா. 78). 3. ஒருசார் வெள்ளாளருக்கும் செங்குந்தருக்கும் ஒருசார் தஞ்சை மாவட்டச் சமணருக்கும் வழங்கும் குலப்பட்டப் பெயர். க. மொதலிக (ஓ).

முதலியார்=மேற்குறித்தமூவகுப்பார்க்கும் வழங்கும் குலப் பட்டப் பெயர்.

முதலியோர்=முதலிய பிறர். கட்டாய இந்தியை எதிர்த்துத் தமிழைக் காத்தவர், மறைமலையடிகள், சோமசுந்தர பாரதியார் முதலியோ ராவர்.

முதலியாண்டான்=1. இராமானுசரின் மாணவரான ஒரு திருமாலடியார். 2. இராமனுசரின் திருவடிநிலை மகுடம்.

முதன்மை=தலைமை. "கணிதமாக்களை முடிவுற நோக்கி யோர் முதன்மை கூறி" கம்பரா மந்தரை. 1).

முதலிமை=தலைமை. (புதுக். கல்வெட்டு, 361).

முதலாளி—1. முதலைவைப்புள்ளவன். 2. பெருநிலக் கிழார். 3. தொழிற்சாலை அல்லது வணிகநிலைய உரிமையாளர். 4. தலைவன்.

முது—முதார்—முதாரி=முன்கை வளையல். "முன்கை முதாரியு மொளிகால" முத்துக். பிள். 17).

முந்து—முது—முதுமை=1. பழமை. (பிங்.) 2. மூப்பு. "இளமை நாணி முதுமை யெய்தி" (மணி 4 : 107). 3. முது மொழி. (சூடா). 4. முற்றின நிலை. பிங்) 5. முதுகாஞ்சி. "கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்" (தொல். புறத். 24).

முதுகண்=1. முதன்மைக்களைகண். "முற்றிழை மகளிர்க்கு முதுக ணாமென" (பெருங். உஞ்சைக். 36 : 198). 2. பேரறி வுரைஞன்.

முதுகாடு=1. பழங்காடு. (திவா.) 2. சுடுகாடு. "முது காட்டிடை......நடமாடி" (தேவா. 773 : 1).

முதுகுடி=குறிஞ்சியும் முல்லையும் இணைந்து வறளும் பாலை நிலத்தில் 'கற்றோன்றி மணடோன்றாக் காலத்து வாளோடு முற்றோன்றி மூத்த" மறவர் குலம். முதுக்குடி. "முரசுகடிப் பிகூஉம் முதுக்குடிப் பிறந்தோன்." (மணி. 1 : 31)

முதுகுரவர்=தாய் தந்தையர். "எம்முது குரவரென் னுற்றனர் கொல்" (சிலப். 16 : 60).

முதுசொம்=முன்னோர் தேட்டு. (யாழ்ப்.).

முதுசொல்=பழமொழி. "தம்பானை சாய்ப்பற்று ரென்னு முதுசொல்லும்" (திருவிசை. வேணாட். 2).

முதுபாலை=காட்டிற் கணவனை யிழந்த தலைவி தனிநின்று புலம்புவதைக் கூறும் புறத்துறை.

> "நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்த
> தனிமகள் புலம்பிய முதுபா லையும்" (தொல். புறத். 24)

முதுவெழுத்து=தேறின எழுத்து. (W.).

முதுவேனில்=கடுங்கோடை.

முதுவர்=1. முத்தோர். "தமராகிய முதுவர்" (கந்தபு. வள்ளியம். 43). 2. அறிவாற்றல் மிக்கோர். "முதுவருள் முந்து கிளவாச் செறிவு" (குறள். 715). 3. மந்திரிமார். 4. புலவர். 5. ஒருசார் மலைவாணர்.

முதுவோர்=1. அரசன், ஆசிரியன், தாய், தந்தை, அண்ணன் முதலிய பெரியோர். "முதுவோர்க்கு முகிழ்த்த கையினை" (சிறுபாண். 231). 2. முத்தோர். 3. அமைச்சர். 4. அறிவான் மிக்கோர். 5. புலவர்.

முதியன்=மூத்தவன். "இளையரு முதியருங் கிளையுடன் றுவன்றி" (அகம். 30).

முதியன்=1. முத்தவன். (கலித். 25). 2. அகவை முதிர்ந்தோன். 3. நான்முகன். "தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக" (கலித். 2.)

முதியாள்=1. முத்தவள். 2. தேவராட்டி. "தெய்வநிகழ் குறமுதியாள் சென்ற பின்பு" (பெரியபு. கண்ணப்ப. 52).

முதுவல்=பழைமையாற் பழுதானது.

முது—முதார். முதார்மாடு=பால் முற்றிய ஆன்.

முதார்—முதாரி=1. முதுமை. "முதாரிப்பாண" (புறம். 138). 2. பால் மறக்குங் கன்று. (W.). 3. முதார் மாடு. (சங். அக.). 4. முற்றியது. முதாரிக்காய். (சிலப். 16 : 24, அரும்).

முது=பேரறிவு. "முதுவா யிரவல" (சிறுபாண். 40).

இளமையில் அறிவின்மையும் முதுமையில் அறிவுண்மையும், பட்டறிவின்மை யுண்மையால் ஏற்படும் இயற்கை நிலைமையென்பதை, மடம் முது என்னுஞ் சொற்கள் உணர்த்துதல் காண்க.

முது—முதுக்கு=அறிவு, தெருட்சி, பேரறிவு.

முதுக்கு+உறை=முதுக்குறை. முதுக்குறைதல்=அறிவு மிகுதல். "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ" (குறள். 707). உறைதல்=தங்குதல். 2. பெண் பூப்படைதல். (தெருளு தல்).

முதுக்குறைவு=1. பேரறிவு. "ஏதிலார் யாதும் புகல விறைமகன் கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு" (நீதி நெறி. 33). 2. பெண் தெருளுகை (பூப்படைவு).

முதுக்குறை=பேரறிவு. "முதுக்குறை நங்கை" (சிலப். 15 : 202).

முது+குறைவு=முதுக்குறைவு=பேதைமை. (சூடா.).

முது—முதிர். முதிர்தல்=1. முதுமை மிகுதல். அகவை முதிர்ந்தவர். 2. விளைவு முற்றுதல். 3. கருநிரம்புதல். "சூன் முதிர்பு" (புறம். 161). 4. நிறைதல். "உறைமுதிரா நீரால்" (திணைமாலை. 103). 5. கடுமையாதல். முதிர்வேனில் (சங். அக.). 6. சொல் திருந்துதல். "முதிராக் கிளவியள்" (மணி. 22 : 181). க. முது, தெ. முதுரு.

முதிர்—முதிர்ச்சி=1. முற்றிய விளைவு. 2. முதுமை மிகுதி. 3. பழுத்த பருவம். 4. முதுக்குறைவு (திவா.). 5. வினை பயன்தரு நிலை.

முதிர்—முதிரி—முதிரிமை=முதுமை. (யாழ். அக.).
*L.* maturare, *F.* maturer, *M E* maturus, ripe, *E* mature.

முது—முதை=பழங் கொல்லை. "முதைச்சுவற் கலித்த முற்று விளம்புல்" (குறுந். 204).

முதை—முதையல்=பழங்காடு. (சூடா.). 2. கடுகு. (சங். அக.).

முது—(முத்து)—முற்று. முற்றுதல்=(செ. கு. வி.) 1. முதுமை யடைதல். (பிங்.). 2. முதிர்தல். "முற்றியிருந்த கனி யொழிய" (நாலடி. 19). 3. முழு வளர்ச்சி யுறுதல். "ஓர் முற்றுவுருவாகி" (திவ். திருவாய். 8 : 3 : 4). 4. தேர்ச்சி பெறுதல். "புரவிப் போருங் கரப்பறக் கற்று முற்றி" (சீவக. 1678). 5. மூண்டெழுதல். "முற்றெரிபோற் பொங்கி" (பு. வெ. 8 : 16). 6. வயிரங் கொள்ளுதல் (சூடா.). 7. நிறை வேறுதல். "இமையோர்க் குற்ற குறைமுற்ற" (கம்பரா. கடல் காண் 11). 8. முடிதல். "தங்கரும முற்றுந் துணை" (நாலடி. 231) 9. இறத்தல். "மாற்றமுந் தாரானு வின்று முற்றும்"

(திவ். பெரியாழ். 2 : 10 : 1). 10. கடுத்தல். 11. நிறைவுறுதல்.

(செ. குன்றுவி.) 1. செய்து முடித்தல். ''வேள்வி முற்றி'' (புறம். 15). 2. அழித்தல். ''முற்றினன் முற்றின னென்று முன்பு வந்து'' (கம்பரா. கும்பகர். 311). ம. முத்துக.

முற்றிழை=1. வேலைப்பாடு திருந்திய அணிகலம். 2. அதை யணிந்த பெண். ''பெற்றிலேன் முற்றிழையை'' (திவ். பெரியதி. 3 : 7 : 8).

முற்றல்=1 மூப்பு. (சூடா.). 2. முதிர்ச்சி. 3. முற்றியது. ''முற்றன் மூங்கில்'' (திவ். திருச்சந். 52). 4. வயிரம். 5. முற்றிய பழக்காய். ''முற்றற் சிறுமந்தி......குற்றிப் பறிக்கும்'' (நாலடி. 237.). 6. நெற்று. 7. முடிகை (சூடா.). 8. திண்மை. ''முற்றல் யானை'' (திவ். திருச்சந். 52.)

முற்ற=முடிய. முற்ற முடிய=முழுதும் முடியும் வரை.

முற்றும்=முழுதும். ''முற்று முணர்ந்தவ ரில்லை''

முற்று - முற்றன்=முழு நிறைவன். ''முற்றிலாதானை முற்றனே யென்று மொழியினும்'' (தேவா. 648 : 9).

முற்றிமை=முதிர்ந்த அறிவு. ''முற்றிமை சொல்லின்'' (சீவக. 2511).

முற்று—முற்றி. முற்றித்தல்=முடித்தல். ''கரும மாயினும் முடியும் வாயின் முற்றித்து'' (பெருங். மகத. 1 : 69).

முது—மூது=முதுமை. ''மூதானவன் முன்னர் முடிந்திடும்'' (கம்பரா. பிராட்டி களங்காண். 18). க. மூதி.

மூதறிதல்=1. அறிவு முதிர்தல். 2. பழமையான செய்திகளை யறிதல். ''மூதறியு மம்மனைமார் சொல்லுவார்'' (திவ். இயற். சிறிய. ம. 19).

மூதா=கிழ ஆன். ''வளைதலை மூதா'' (பதிற்றுப். 13 : 6).

மூதாய்=பாட்டி. மூதணங்கு=காளி. (சூடா.).

மூதிரி=1. கிழமாடு. 2. கிழ எருமை. 3. எருமை. (சது.).

மூதிரி—மூரி=1. பெருமை. ''மூரிக்கடற்றுனை.'' (பு. வெ. 3 : 3). 2. வலிமை. ''மூரி வெஞ்சிலை'' (கம்பரா. கும்பகருண. 26). 3. பழமை. (W.). 4. கிழம். ''மூரியெருத்தா லுழவு'' (இன். நாற். 21). 5. எருமை. ''மோட்டிள மூரி யுழக்க''

(கம்பரா. அதிகை. 69). 6. எருது. "நெறிபடு மருப்பி னிருங் கண் மூரியொடு" (பதிற்றுப். 67 : 15). 7. விடையோரை (திவா.).

ம. மூரி, தெ., க., து. முரி.

மூதில்=1. பழங்குடி. 2. பழமையான மறக்குடி. "தமியன் வந்த மூதிலாள" (புறம். 284).

மூதுணர்தல்=நன்குக வுணர்தல். "மூதுணர்ந்தவ ரன்றி மொழிவரோ" (உபதேசகா. சிவபுண். 229).

மூதுரை=1. பழமொழி. "மூழைப் பரியாத தென்னு மூதுரையு மிலளே" (திவ். பெரியாழ். 3 : 7 : 4). 2. பிற்கால ஔவையார் இயற்றிய ஓர் அறநூல்.

மூதுவர்=முன்னோர். "விண்ணுட்டவர் மூதுவர்" (திரு விருத். 2).

மூதை=(பெ.). 1. பழங்கொல்லை. 2. காளி. (W) (கு. பெ. எ.) முந்தை. "மூதைவினை கடைக்கூட்ட" (சிலப். 9. இறுதி வெண்பா.).

முது—மூ. மூத்தல்=1. அகவை யுயர்தல். "மூத்தோன் வருக வென்னாது" (புறம். 183. 2 முதுமை யுறுதல். "தமியன் மூத்தற்று" (குறள். 1007). 3. முடிதல் 'மூவா முதலா வுலகம்' (சீவக. 1). 4. கெடுதல். "மதிலெய்த மூவாச் சிலை முதலவர்க்கு" (தேவா. 936 : 4).

மூ=மூப்பு. (யாழ். அக.)

மூத்தண்ணன்=பெரியண்ணன்.

மூத்ததிகாரம்=தலைமை யதிகாரம் (T. A. S.).

மூத்த திருப்பதிகம்=காரைக்காலம்மையார் இயற்றிய பதிகம் (பெரியபு. காரைக்கா. 63).

மூத்தப்பன்=பாட்டன். "எம்மு னெந்தை மூத்தப்பன்" (தேவா. 1086 : 9). ம. முத்தப்பன்.

மூத்த பிள்ளை=திருவாங்கூர் அரசரால் நாஞ்சில் நாட்டு வெள்ளாளருக்குக் கொடுக்கப்பட்ட பட்டம்.

மூத்தவன்=1. அகவையிற் பெரியவன். 2. அண்ணன். "மூத்தவற் காகவேண்டி முன்புதூதெழுந்தருளி" (திவ். பெரியதி. 4 : 6 : 7). 3 மேலோன். (W.).

முத்தார் = 1. மூத்தோர். "முத்தாரிளையார்" (ஆசாரக். 65). 2. கணவனின் தமையனார்.

மூத்தவள், மூத்தாள் = 1. முதியவள். (பிங்.). 2. அக்கை 3. முதல் மனைவி. 4. மூதேவி. (யாழ். அக.).

மூத்தோர் = 1, முதியவர். "விருந்தினர் மூத்தோர்" (ஆசாரக் 22.) 2. பண்டிதர். (திவா.). 3. மந்திரிமார். (திவா.).

மூத்தோன் = 1. அகவை மேற்பட்டவன். 2. அண்ணன். (பிங்.), 3. முதியவன். 4. 48 — இற்குமேல் 64 அகவைக் குட்பட்டவன். (W.).

மூ — மூப்பு = 1. அகவை யுயர்வு. 2. முதுமை. "முனிதக்க மூப்புள" (நாலடி. 92) 3. தலைமை. (யாழ். அக.). 4. ஒட்டாரச் செருக்கு. தன் மூப்பு = முற்றதிகாரம். ம. மூப்பு, தெ., க. முப்பு.

மூப்பன் = 1. சில குலத்தாரின் ஊர்த் தலைவன். 2. சில குலத்தாரின் பட்டப் பெயர்.

மூப்பான் = 1. அகவை மேற்பட்டவன். 2. ஆட்டத்தில் வென்றவன். 3 முதியவன். 4. சிவபிரான். "மூப்பான் மழுவும்" (தனிப்பா. i, 32 : 61).

மூப்பர் = 1. பெரியோர். "மூப்பரை யிகழ்ந்தோமாகில்" (அரிச். பு. நகர்நீ. 151). 2. கிறித்தவக் குருமாருள் ஒருவகையார் (Deacons) – W.

மூப்பி = 1. முதுமகள். "மூப்பிமாரரலே.......நீராட்டி" (சீவக. 1892, உரை). 2. தலைவி. (W.).

மூப்புக்கழிவு = 1. ஊர்த் தலைவனுக்குச் சேரவேண்டிய பொருள். (M. M, 509). 2. வரித் தொகையிலிருந்து ஊர்த் தலைவனுக்குரியதைக் கொடுத்ததனாற் கழிக்கப்படும் குதி.

மூப்பு முகனை = தலைமை பற்றிவரும் சொற் செல்வு (யாழ்ப்).

மூதேவி = 1. திருமகளுக்கு முந்திப் பிறந்தவளென்று சொல்லப்படும் வறுமைப் பெண் தெய்வம். 2. சோம்பல், பகல் தூக்கம். மூதேவியடைந்து முடங்கிக் கிடக்கிருள். (உ. வ.). 3. ஆக்கங் கெட்ட சோம்பேறிப் பெண். 4. ஒரு வசைச் சொல்.

---

# சங்கநூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(பரல் ௪: ௨0௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

9. நுழைமீன்

புறநானூற்றில் ஒரே ஒரு பாடலில் நுழைமீன் என்ற ஒரு மீன் கூறப்பட்டுள்ளது.

"................. பெருங்கழி நுழைமீ னருந்தும்
துறைந்த தாவியம் புதாஅஞ் சேக்கும்" —புறம், 391.

தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள பொறையாற்றில் பெருங்கழியில் பெரிய மரக்கால்நாரை நுழைமீனை அருந்தியதாகக் கூறப்பட்டுள்ளது. நுழைமீன் ஒருவகை மீன் என்றும், நுழைந்து செல்லுகின்ற மீனுமாம் என்றும் உ. வே சாமிநாதய்யர் குறிப்புரை எழுதியுள்ளார். 'நிலம் கரைஞ்சான்' என்றொரு மீனின் பெயர் தமிழ்நாட்டு மீனவரிடையேயும் ஈழநாட்டு மீனவரிடையேயும் வழங்குகின்றது. இந்தப் பெயருக்குச் சேற்றில் நுழையும் மீன் என்று மீனவர் விளக்கம் கூறுகின்றனர். இந்த மீன் சேற்றில் புகுந்துகொள்வதால் எடுப்பது எளிதன்று என்று மீன் வளத்துறை அறிஞர் டே கூறியுள்ளார். (Habitat - Seas of India ; said to live in the mud and be taken with difficulty.) சேற்றுத்தண்ணீரில் இந்த மீனை விட்டபோது சேற்றுக்குள் உடல் நுழைத்துகொண்டு தலையை மட்டும் சேற்றுக்கு வெளியே காட்டியதாக இதே அறிஞர் கூறியுள்ளார். ஈழநாட்டுக் கழிமுகங்களில் சேற்றில் நுழைந்து கண்களை மட்டும் வெளியே காட்டும் மீன் என்று மன்ரோ என்ற மீன்வளத்துறை அறிஞர் கூறியுள்ளார். (Estuarine fish burying in mud wirh only eyes exposed ) இவர்கள் கூறிய விளக்கம் புறநானூற்றில் நுழைமீன் என்று குறிப்பிட்ட மீன் எதுவாக இருக்கலாம் என்பதை நன்கு தெளிவாக்குகின்றது. பெருங்கழியில் இருந்த நுழைமீனைப் பெரிய மரக்கால்நாரை அருந்தியதாகப் புறநானூறு கூறியுள்ளது. கழியில் சேறு இருப்பது இயல்பே. அந்தச் சேற்றில் நுழைந்த நுழைமீனை மரக்கால்நாரை குத்தி எடுத்து அருந்தியிருக்க வேண்டும். மனிதரால் நுழைமீனைப் பிடிக்க எளிதாயில்லா விட்டாலும் நாரைக்கு அதைக் கவருதல் எளிதாகும். நுழைமீன் அறிவியலில் கூறப்படும் (Ichythyscopus inermis)

என்பதேயாகும். மீனவரிடையே வழங்கும் தற்காலத் தமிழ்ப் பெயரும், இந்த மீனின் சேற்றில் நுழையும் வழக்கமும் புறநானூற்றில் சொல்லிய நுழைமீன் எதுவென்று அறிய உதவுகின்றது.

## 10. மலங்கு

மலங்கு என்றொரு மீனைப்பற்றிப் புறநானூற்றில் ஒரு பாடலிலும் சிலப்பதிகாரத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

> "சிறுமா ணெய்த லாம்பலொடு கட்கும்
> மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட"
>
> —புறநானூறு, 61.

> "பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
> நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
> மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்"
>
> —சிலப், நாடுகாண் 78—80 வரி.

அப்பர் தேவாரத்தில் முதுநீர் மலங்கு என்றழைக்கப்பட்டுள்ளது. மலங்கு என்ற மீன் தற்காலத்தில் விலாங்கு என்றழைக்கப்படுகின்றது. மலங்கு என்ற பெயரே விலாங்கு என்று மாறியதாகத் தெரிகின்றது. இந்த மீன் பாம்பு போன்று நீண்டு இருப்பதுடன் தலை பாம்புத் தலைபோல இருக்கும்.

> "பாம்பிற்கு ஒருதலை காட்டி ஒருதலை
> தேம்படு தெண்கயத்து மீன்காட்டும் - ஆங்கு
> மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
> விலங்கன்ன வெள்ளறிவி னார்"
>
> —நாலடியார், 375.

ஒரு தலையினைப் பாம்பிற்குக் காட்டி இன்னொரு தலையாகிய வால் புறத்தைப் பொய்கையில் உள்ள மீனிற்குக் காட்டுகிற விலாங்கு மீன் போன்ற செய்கையுடைய விலைமகளிர் என்று நாலடியார் கூறியுள்ளது. இந்த மீன் பாம்புபோல உடலுடையதாயினும் மீனைப்போல வாலுடையது. சினம் வந்தபோது தலையைப் பெரிதாக்குவதால் பாம்பின் தலைபோலத் தோன்றும். பாம்பு போலப் பொந்துகளில் ஒளியும். இந்த முறையில் பாம்புபோல மாறுபடுவதால் மலங்கு எனப்பட்டது. மலங்கு என்பதற்கு மாறுபடல் என்று பொருளாகும். இந்த மீன் கடலிலிருந்து ஆறுகளுக்குச் சென்று முட்டையிடும். இந்த மலங்குகளையே கழனிகளிலும் காணலாம். புறநானூற்றிலும் சிலப்பதிகாரத்திலும் மலங்கு கழனியில் மிளிர்ந்ததாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். நீர்நாய்கள் கௌவியதால் மலங்கு மிளிர்ந்ததாகச் சிலப்பதிகாரம் கூறியுள்ளது. நீர்நாய்கள் மலங்கு மீனை

விரும்பி மிகுதியாக உண்ணும் என்று கண்டுபிடித்துள்ளனர். (There is no doubt that the otter kills great quantities of eels.- "Wild Animals and their ways" - David Stephen - Collins) மலங்கு நீர்நாயிடமிருந்து தப்பித்துக் குதித்ததையே சிலப்பதி காரம் கூறியுள்ளது. சிலப்பதிகாரத்தில் மலங்கு பாய்ந்தால் கண்ணகி பயப்படுவாள் என்று கூறியது பாம்பென்று மயங்கிய தாலேயாகும். கழனிகளில் சேற்றில் உள்ள வளைகளில் மலங்கு புதைந்து வாழும் தன்மையுடையது. இந்த மீனைச் சேருப் பாம்பு என்றும் அழைப்பர். இந்த மீன் சுவையுடையதாயினும் பாம்பு போலிருப்பதால் சிலர் உண்பதில்லை. இந்த மீனை அறி வியலில் (Anguilla Bengalensis) என்றழைப்பர். ஆங்கிலத்தில் (Eel) என்றழைப்பர். மலையாளத்தில் பாம்புமீன் என்றே அழைக்கின்றனர். தெலுங்கு மொழியில் 'மலூத', 'மலுத', என்றும் 'மலுபாமு' என்றும் அழைக்கின்றனர். 'வாலுகு' என்றும் அழைப்பர். குயி (Kui) எனும் பழந்திராவிட மொழியில் 'மிராங்க' என்று அழைக்கின்றனர். இப்பெயர்கள் எல்லாம் மலங்கு என்ற தமிழ்ப் பெயருடன் தொடர்புடையவை திவாகரம் முதலிய நிகண்டுகளில் நூறை என்ற பெயரும் மலங்குமீனின் பெயராகக் கூறப்பட்டுள்ளது. பழந்திராவிட மொழியான நய்க்கி (Naiki) மொழியில் 'நாறி' என்றும், கோண்டி (Gondi) மொழியில் 'நாறு', 'நாறி' என்றும் வழங்குவதாகக் கூறப்பட் டுள்ளது. இந்தப் பெயர்கள் எல்லாம் தமிழ்ப் பெயராகிய நூறை என்பதுடன் ஒத்துக் காண்பது தெளிவாகும். இந்த மீனை 'பாம்', 'பாமி' (Baam) என்றும் இந்த மொழிகளில் அழைப்பர். இம் மொழிகளில் பாம்பு என்ற பெயராலே அழைப்பது கவனிக்கத்தக்கதாகும். தெலுங்கில் மலங்குபாம்பு என்ற பொருளில் 'மலுதபாமு' என்று இதன் பெயர் வழங்குவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## 11. வரால்

சங்க நூல்களில் பல பாடல்களில் வரால் மீனைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. இஃது ஒரு நன்னீர் மீனாகும். நன்னீர் மீன் களில் மிகவும் சுவையுடைய மீனாகக் கருதப்படுவதால் இதைப் பற்றிப் பல பாடல்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

*"பருவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக்*
*கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி"* —அகம், 36

*"காட்டுறைப் பட்ட மோட்டிரு வராஅல்*
*துடிக்கட் கொழுங்குறை நொடுத்துண் டாடி"* —அகம், 196

"நாண்கொளுங் கோலின் மீன்கொள் பாண்மக
டான்புன லடைகரைப் படுத்த வராஅ
ஞரரி நறவுண் டிருந்த தந்தைக்கு
வஞ்சி விறகிற் சுட்டுவா யுறுக்குந்" —அகம், 216

"ஈர்ந்த ணெருமைச் சுவல்படு முதுபோத்துத்
... ... ... ...
பைங்கிண வராஅல் குறையப் பெயர்தந்து" —அகம், 316

"நுண்ணரற் பருவராற்
குரூஉக்கெடிற்ற குண்டகழி" —புறம், 18

"பனை நுகும் பன்ன சினைமுதிர் வராலொ
டுறழ்வே லன்ன வொண்கயன் முகக்கும்" —புறம், 249

"ஓங்குசினை மாவின் றீங்கனி நறும்புளி
மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை"
—புறம், 399

"கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி" —நற்றிணை, 60

"வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்"
—ஐங்குறுநூறு, 48

"பிடிக்கை யன்ன செங்கண் வராஅற்
றுடிக்க ணன்ன குறையொடு விரைஇப்"
—மலைபடுகடாம், 457-458

"உண்டுறைப் பொய்கை வராஅ லினமிரியுந்
தண்டுறை யூர தகுவதோ - வொண்டொடியை"
—ஐந்திணையெழுபது, 52

ஓர் அகநானூற்றுப் பாடலில் 'வரால் பல்வரி இரும்போத்து' என்று கூறப்பட்டுள்ளது. 'இருவரால்' என்றும் அழைக்கப் பட்டுள்ளது. வரால்மீன் கருமையாகவும் காணப்படும். வரி யுடனும் காணப்படும். வரால் மீன்கள் ஆணும் பெண்ணுமாக வாழ்வன என்று கண்டுபிடித்துள்ளனர். இரும்போத்து என்ற பெயர் வரால் மீனின் ஆணைக் குறித்து வழங்கியதாகும். வரால் மீனைத் தூண்டிலில் பிடிப்பதுதான் வழக்கமாகும். சங்க நூல் களிலும் தூண்டிலில் பிடிப்பதையே கூறியுள்ளனர். அயிரை மீனைத் தூண்டில் முள்ளில் வைத்து வராலைப் பிடிப்பதைப்பற்றிப் பழமொழி நானூறு கூறியுள்ளது. உயிருள்ள இரையைத் தூண்டில் முள்ளில் வைத்து வராலைப் பிடிப்பது எளிது என்று மீன் பிடிப்போர் கூறுவர். வரால்மீன் நீர்நிலைகளில் உள்ள

செடி கொடிகளில் மறைந்து வாழும் தன்மையுடையது. வரால் மீன் ஆம்பல் இலையைக் கிழித்து குவளைமலரைச் சிதைத்து வள்ளைக் கொடியை மயக்கித் தூண்டிலில் வராது இருந்ததாக அகநானூற்றுப் பாடல் (36) கூறியுள்ளது. ஆம்பல், குவளை, வள்ளை ஆகிய கொடிகளின் உள்ளே வாழும் வராலைப்பற்றிக் கூறியது இயற்கையான செய்தியே. சினையுள்ள வரால் பனங் குருத்துபோல் இருந்ததாகப் புறநானூறு கூறியுள்ளது இயற்கையான உவமையாகும். பிடிக்கைபோல் வரால் இருந்த தாக மலைபடுகடாம் கூறியுள்ளது. நிறத்திலும் உருவத்திலும் இந்த ஒப்புமை பொருத்தமே. வராலின் கண்ணைக் 'கருங்கண்' என்றும் 'செங்கண்' என்றும் கூறியுள்ளனர். வராலில் பெரியதையே தமிழர் பெரிதும் விரும்பினர். பருவரால், மோட்டிரு வரால் என்றே பாடல்களில் வர்ணிக்கப்படுகின்றன. தடித்த வராலின் பெரிய துண்டையே விரும்பி உண்டனர். வரால் மீனை வெட்டிய துண்டு துடியின் கண்போல் இருந்த தாகக் கூறப்பட்டுள்ளது. நெடுங்காலம் துறையிலிருந்து வளர்ந்த 'மோட்டிரு வரால்' மீனின் கொழுவிய துண்டை விற்றதைப் பற்றி அகநானூறு கூறியுள்ளது. பெரிய வரால் மீன் கொழுப்புடையது. 'பைந்நிண வரால்' என்றும் கூறப் பட்டுள்ளது. வரால் மீனையும் சுறா மீனையும் துண்டுபோட்டு அதை மாங்கனியிட்ட புளிக் குழம்பில் போட்டு உண்டதைப் பற்றிப் புறநானூறு கூறியுள்ளது. வரால் மீனையும் புளித்த மாங்காயையும் சேர்த்து ஆக்கிய சுவைமிக்க புளிக்குழம்பைச் சோற்றில் கலந்து உண்பது இன்றும் வழக்கமாகும். வராலில் பெரிய துண்டு புரளும் குழம்பைச் சோற்றில் கலந்து கவளமாக நிறைய எடுத்து உண்டதை நற்றிணைப் பாடலும் கூறியுள்ளது. வரால்மீனைச் சுட்டு மதுவொடு உண்டதையும் குறிப்பிட் டுள்ளனர். வரால்மீனை வங்காளத்தில் சிலர் உண்பதில்லை. வரால்மீனின் தலை தட்டையாக, பெரிய செதிள்களுடன் பாம்பின் தலைபோலக் காணப்படும். வரால்மீனில் மூன்று வகைகள் உண்டு. வரியுடன் இருப்பதை வரிவரால் என்று சங்க நூல்கள் கூறும். இந்த வராலே பெரும்பாலும் காணப்படுவது. குடகுமொழியில் வரைமீன் என்ற பொருளில் 'பரேமீனி' என்றழைப்பதைக் கவனிக்க வேண்டும். தேவாரத்தில் வரி வரால் என்ற பெயரே பல பாடல்களில் வருகின்றது. வரி அரா என்ற பெயரிலிருந்து வரால் என்ற பெயர் வந்திருக்கலாம். ஈழநாட்டுச் சிங்கள மொழியில் பெரும்பாலான மீன்களின் பெயர்கள் தூய தமிழ்ப் பெயர்களாகவே உள்ளன. தமிழ்ப் பெயர்கள் சிங்கள மொழிக்கேற்ப மாற்றி ஒலிக்கப்படுகின்றன. சிங்கள மொழியில் வராலை 'அரா' என்றழைக்கின்றனர்.

'கங்காரா' என்றும் அழைக்கின்றனர். கங்கா என்றால் சிங்கள மொழியில் ஆறு என்று பொருள். கங்க அராவே அஃதாவது ஆற்றுவராலே 'கங்காரா' எனப்பட்டது. தமிழ்நாட்டிலும் வெள்ளரா என்றொரு மீன் அழைக்கப்படுகின்றது. இது வஞ்சிரம் என்ற மீன் இனத்தைச் சேர்ந்தது. வெள்ளரா என்ற பெயர் நல்ல பாம்பிற்கும் பெயராகச் சங்க நூல்களில் வழங்கி யுள்ளது.

> "அரிலிவர் புற்றத்து அல்கிரை நசைஇ
> வெள்ளரா மிளிர வாங்கும்
> பிள்ளை எண்கின் மலைவயி னானே" —அகம், 257

கறையான்புற்றில் வாழும் நல்லபாம்பு வெண்மை நிறமாக இருக்கும். இந்தப் பாம்பைப்போல வெள்ளை வஞ்சிரமீன் தோன்றியதால் அதை வெள்ளரா என்று தென்னாற்காடு மீனவர் அழைக்கின்றனர். வரால்மீனைச் சங்ககாலத்திற்கு முன்னர் அரா என்று தமிழில் அழைத்திருக்க வேண்டும். வரால் மீன் தலை பாம்புத் தலைபோல இருப்பதால் அரா என்றழைக்கப் பட்டிருக்க வேண்டும். சில வடநாட்டுப் பெயர்கள் இதை அரா என்று சுட்டிக்காட்டுகின்றன. இதன் அறிவியற் பெயரும் பாம்புத்தலைமீன் என்ற பொருளிலேயே வருகின்றது. வரியுடைய வராலை வரிஅரா என்றழைத்திருப்பர். இதுவே வரால் என்று மாறியிருக்க வேண்டும். சிங்களமொழியில் பழைய தமிழ்ப் பெயரான அரா என்ற பெயர் மாறாமல் இன்றும் வரால்மீனைக் குறித்து வழங்குகின்றதைக் காணலாம். சிங்களமொழியில் வராலுக்கு வேறு சிங்கள மொழிப்பெயர்களும் உண்டு. ஆனால் இலங்கை நாட்டுத் தமிழர் தமிழ்நாட்டோடு கொண்டிருந்த பழக்கத்தால் அரா என்ற பெயரை மறந்து வரால் என்ற பெயரையே வழங்குகின்றனர். இலங்கைநாட்டுத் தமிழில் விரால் என்றும், இருவிரால் என்றும் இருவகை வரால்களுக்குப் பெயர் கூறுவர். வரியுடைய வராலைத் தமிழ்நாட்டில் அழைப்பது போல் வரால் என்று அழைக்கின்றனர். ஆனால், தமிழ்நாட்டில் பூவரால் என்றழைக்கும் ஒருவகை வராலை இலங்கைத் தமிழர் 'இருவரால்' என்றழைக்கின்றனர். இருவரால் என்ற பெயர் வழக்கைத் தமிழ்நாட்டில் காண முடியவில்லையாயினும் சங்க நூல்களில் புறநானூற்றிலும் (399) அகநானூற்றிலும் காண லாம். ஆதலின் சிங்களத்தமிழர் கூறும் பெயர் சங்ககால மரபில் வந்தது என்பதை உணரவேண்டும். சங்கநூல்களில் கூறிய 'இருவரால்' என்பதும் இலங்கைத் தமிழர் இந்த பெய ரால் குறிப்பிடும் வரால்மீனாகவே இருக்கலாம். இதை இன்று பூவரால் என்று தமிழ்நாட்டில் அழைக்கின்றனர். கன்னட

மொழியில் பூவரால் என்ற பெயரே அம் மொழிக்கேற்ப மாறி ஹு வரால் என்று வழங்குகின்றது. இந்த வராலிற்குக் கண்ணில் சிவந்த கோடு இருக்கும். சங்க நூல்களில் 'செங்கண் வரால்' என்றும் இந்த வரால்மீன் அழைக்கப்பட்டுள்ளது என்று கருதலாம். பூவரால் என்று தமிழ்நாட்டில் இன்று அழைக்கப் படும் வரால் அறிவியலில் Ophiocephalus marulius என்றழைக்கப்படுகின்றது. வரியுடைய வரால்மீனை வரால் என்று தற்காலத்தில் அழைக்கின்றனர். இதுவே பெரும் பான்மையாகத் தமிழ்நாட்டில் பிடிபடுகின்றது. இதை Ophiocephalus Striatus என்றழைப்பர். இதையே அகநானூறு 'வரால் பல்வரி இரும்போத்து' என்று குறிப்பிட்டுள்ளது. வரால் என்று அடைமொழியின்றியே சங்க நூல்களில் குறிப்பிடும் வரால் இதுவேயாகும். தற்காலத்தில் குறவை என்றழைக்கப்படும் மீனும் வராலில் ஒருவகையேயாகும். பள்ளு நூல்களிலும் மீனவர்கள் வழக்கிலும் குறவைமீன் வராலின் வேறான மீனாகக் கருதப்படுகின்றது. ஆனால் அது தவறு. வராலினத்தில் மிகவும் குறுகிய வளர்ச்சியுடைய ஒருவகை வராலே குறவை யாகும். குறவையை Ophiocephalus puntatus என்றழைப்பர்.

(தொடரும்)

---

## கலைச்சொல்

ஏழிசையில் ஏறுவரிசை இறங்கு வரிசை என்பவற்றை முறையே ஆரோகணம், அவரோகணம் என வழங்குகின்றனர். இவை வடசொற்கள். சாத்தனார் கூத்தநூல் இவற்றை 'ஆளத்தி' என்றும் 'நாளத்தி' என்றும் வழங்குகின்றது. அன்றியும் 'ஆளம்', 'நாளம்' எனவும் கூறுகின்றது. தமிழில் கலைச்சொற்கள் இல்லை என்னும் வறுமை இல்லை; தேடிக் கண்டு பயன் கொள்ளாத பொல்லாத வறுமையே உண்டு.

"ஏழிசை நேர்இயல் ஆளத்தி
ஏழிசை மறிநிரையேல் நாளத்தி" —இசைநூல். 3)

(இ. கு.)

# ரீயூனியன் தீவில்
# தமிழ் தெரியாத தமிழர்கள்

'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்ற மூதுரைக் கிணங்கத் தமிழ் நாட்டைவிட்டுப் பொருள் தேடும் பொருட்டுக் கடல் கடந்து பல நாடுகளுக்குத் தமிழர்கள் சென்று குடியேறியுள்ளனர். கடல் கடந்த இலங்கை, கடாரம் போன்ற நாடுகளைத் தன் போர் வலிமையால் அடிமைப் படுத்திய தமிழர்கள் இன்று கூலி வேலைக்காகப் பல நாடுகட்குச் சென்று, பெற்ற நற்றாயையும் பிறந்த பொன்னாட்டையும் மறந்து வேற்று நாட்டினராய், வேற்று மொழியினராய் வாழுகின்றார்கள். ஆனால், அவர்கள் உள்ளத்தில் பொங்கி வழியும் தமிழ்ப் பற்றும் சமயப் பற்றும் தாய்த்தமிழ் நாட்டினரையும் விஞ்சக் கூடியவை.




தமிழைப் பேசவும் படிக்கவும் தெரியாதவர்கள்; ஆனால், தாங்கள் தமிழர்கள் என்று எண்ணிக்கொண்டிருக்கும் தமிழர்கள் மொரீசியசு தீவை அடுத்துள்ள ரீயூனியன் தீவில் வாழ்கின்றனர். இது பிரான்சு நாட்டின் ஒரு பகுதி. பிரெஞ்சு ஆட்சியின்கீழுள்ள ஒரு சிறு தீவு. இதன் பரப்பளவு 2,500 ச. கி. மீ. தீவின் நடுவில் இருப்பது மலைப்பகுதி. இங்கே ஓர் எரிமலையும் உண்டு. கடற்கரை ஓரமாகப் பேரூர்கள் அமைந்துள்ளன. இத் தீவின் தலைநகர் செயின்ட்டெனிசு (St. Denis). சுமார் ஐந்து லட்சம் மக்கள் இதில் வாழ்கின்றனர். இதில் பாதியளவு தமிழர்கள். பிரெஞ்சுக்காரர்கள், சீனர்கள், ஆப்பிரிக்கர்கள் முதலியோரும் இங்கு வாழ்கின்றனர். செயின்ட் பியர், செயின்ட் பெனுவா, செயின்ட் லுயிஸ் போன்றவை வேறு சில முக்கியமான நகர்கள்.

ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகட்கு முன் அங்குள்ள கரும்புத் தோட்டங்களில் வேலை செய்வதற்காகத் தமிழர்கள் குடியேறினர். நெப்போலியன் காலத்தில் ஒப்பந்தம் செய்யப்பட்டு இங்குக் குடியேறியதாக அத் தமிழர்கள் கூறுகின்றனர். இந்த முந்நூறு ஆண்டுகளாக அவர்கள் தமிழ்நாட்டுடன்

தொடர்பற்று இருக்கிறார்கள். இருப்பினும் அவர்களுடைய தமிழுணர்ச்சியும் தமிழ்ப் பண்பாடும் சமயப்பற்றும் குன்றவில்லை. அரசியல் காரணமாகவும் பாதிரிமார்களாலும் பலர் கிறித்துவராக மாறியிருப்பினும் இந்து சமயப் பழக்கங்களைக் கைவிடவில்லை. மேனாட்டு உடைகளையே அணிகின்றனர். ஆனாலும் தமிழர் உடை முறையைப் பெரிதும் விரும்புகின்றனர்.

பல தலைமுறைகளாக அங்கு வாழ்ந்துவரும் தமிழர்கள் இன்னும் தமிழ்ப் பெயர்களையே சூட்டிக் கொள்கிறார்கள். அப்பெயர்கள் முதலில் பார்க்கும்போது பிரெஞ்சு மொழிப் பெயர்கள் போலவே இருக்கும். பெர்மல், கிச்சனின், சோலியன், அனன்டபென், நடராசின், விரபின், கடிவெல், பொனபின் இவை அவர்கள் பெயர்களில் சில. இவையெல்லாம் நல்ல தமிழ்ப் பெயர்களே. ஆனால், இவற்றின் நல்ல தமிழ் வடிவங்கள் இவர்களில் யாருக்கும் தெரியாது. இவை முறையே பெருமாள், கிருஷ்ணன், சோலையன், ஆனந்தப்பன், நடராசன், வீரப்பன், கதிர்வேல், பொன்னப்பன் என்ற நல்ல தமிழ்ப் பெயர்களாகும். இதை அவர்களிடம் கூறும்போது அவர்கள் வியப்படைகிறார்கள். சிலருடைய பெயர்கள் மூலத்தைக் கண்டுபிடிக்க முடியாத அளவிற்கு உருமாறியுள்ளன. ஒருவருடைய பெயர் லச்பாடியா (Lacpatia). சற்று ஊகித்த பின்தான் 'லட்சுமிபதி' தான் இவ்வாறு மாறியிருக்கிறது என்பதை அறிய முடிகிறது. ஆண்களில் சிலர் பெண் பெயர்களை வைத்துக் கொள்கிறார்கள். கங்கம்மா என்பது ஓர் ஆணின் பெயர்.

இத் தமிழர்கள் பேசுவது 'கிரியோல்' என்ற கொச்சையான பிரெஞ்சு மொழி. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் ஆங்கிலமும் பயில்கிறார்கள். ஆனால், பெரும்பாலோருக்கு ஆங்கிலம் பேசத் தெரிவதில்லை.

இவர்கள் குடியிருக்கும் ஊர்களிலெல்லாம் முருகன் கோயில்களும் காளி கோயில்களும் கட்டப்பெற்றுள்ளன. முருகன், காளி ஆகிய இரண்டும் இவர்கள் மிகவும் விரும்பி வழிபடும் தெய்வங்கள். சமய விழாக்கள் அனைத்தையும் மிகச் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். தைப்பூசம், ஆடிக்கிருத்திகை போன்ற விழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடுவதோடு, அச்சமயம் நாவில் வேலைக் குத்திக்கொண்டு காவடி எடுக்கிறார்கள். ஆண்களும் பெண்களும் பக்தியுடன் காவடியெடுக்கின்றனர். அம்மனுக்கு விழாவெடுக்கும்போது 'தீமிதித்தல்' தவறாது நடைபெறுகின்றது. தேங்காய் உடைத்து, பூ, பழம் ஆகியவற்றுடன் வழிபாடு செய்கிறார்கள். பொங்கல், வடை, சுண்டல் ஆகியவை வழிபாட்டிற்குப் பின் அன்பர்களுக்கு வழங்கப்பெறுகின்றன.

நீண்ட காலத்திற்குப் பின் இப்போது அங்குள்ள தமிழர்கள் தமிழ்ப்பண்பாட்டை இன்னும் வலியுறுத்துவதற்கான வழி வகைகளை வகுப்பதற்காக 'ரெயூனியோன் தமிழ்ப் பண்பாட்டுக் கழகம்' ஒன்றைத் தொடங்கியிருக்கிறார்கள். தமிழ் மொழியை முறையாகக் கற்பிப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்து வருகின்றனர். இக் கழகத்தின் சார்பில் 'தமிழ்' (Tamil என்ற திங்கள் இதழைப் பிரெஞ்சு மொழியில் தொடங்கியிருக்கிறார்கள். இதன் 7 ஆம் இதழ் இம் மாதம் 'பொங்கல்' சிறப்பிதழாக வெளிவந்துள்ளது. இவ் வேட்டின் முகப்பில் தமிழ்த்தாய் நான்கு கையளாய் வலக்கையில் சுவடியும் இடக்கையில் தாமரையும் மற்று இருகைகளில் வீணையுமேந்தித் தாமரைப் பூவின்மேல் நின்ற திருக்கோலத்தில் மிக அழகுடன் திகழ்கிறாள்.




அக் கழகம் இவ்விதம் அவ்வப்போது தமிழ் இலக்கியம், சமயம், பண்பாடுபற்றிய சிறு கட்டுரைகளைப் பிரெஞ்சு மொழியில் வெளியிட்டு வருகின்றது. திருக்குறள் மணிகள் பிரெஞ்சு மொழிபெயர்ப்புடன் வெளிவந்துள்ளன. விரைவில் பிரெஞ்சு மொழி வாயிலாகத் தமிழைக் கற்பிக்கும் பாடங்கள் ஒவ்வொன்றாகத் தொடர்ந்து இவ்விதழில் வெளிவர இருக்கின்றன.

இக் கழகத்தின் உறுப்பினர்களாகிய திரு பெர்மல், அண்ருமனி, லச்பாடியா முதலியோர் அண்மையில் தமிழகத்திற்கு வந்திருந்தார்கள். தமிழ்ப் பாடல்களைப் பிரெஞ்சு எழுத்தில் எழுதி வைத்துக்கொண்டு மனனஞ் செய்து இசையோடு பாடுகிறார்கள். பொருள் தெரிந்தோ, தெரியாமலோ அவர்கள் இசையோடு பாடும்போது நமக்குக் கேட்பதற்கு இனிமையாக இருக்கின்றது. சரளமாகப் பிரெஞ்சு மொழி பேசும் இவர்கள் திக்கித் திணறி ஆங்கிலத்தைப் பேசுகின்றனர். அதிலும் வந்திருந்தவர்களில் திரு பெர்மல் ஒருவர்தாம் ஆங்கிலத்தில் பேசுகிறார். மற்றவர்கட்குப் பிரெஞ்சு மொழியைத் தவிர வேறொன்றும் தெரியாது. ஆனால் தமிழ் உணர்ச்சியும் தமிழ் உள்ளமும் கொண்டவர்கள். தமிழ் நாட்டிலிருந்து தம் தீவிற்கு இசைக் கலைஞர்களை அழைத்துக் கொண்டு செல்லத் திட்டமிட்டுள்ளனர். தமிழை அத் தீவுமக்கள் அனைவருக்கும் கற்பிக்கப் பெரிய திட்டமொன்றைத் தீட்டி வருகின்றனர். முடிந்தால் தமிழ்ப் பெண்களைத் திருமணஞ்செய்து கொள்ளவும் விரும்புகின்றனர்.

---

## மறைமலையடிகளாரைப் பற்றிய ஆய்வுக்கு இலண்டன் பல்கலைக் கழகத்தின் 'டாக்டர்' பட்டம்

மறைத்திரு மறைமலையடிகளாரின் நூற்றுண்டு விழா நிகழவிருக்கும் இவ்வாண்டில் அவரைப் பற்றிய ஆய்வுக்கு இலண்டன் பல்கலைக் கழகம் பிஎச். டி. பட்டம் வழங்கியுள்ளது மகிழ்ச்சிக்குரியது. அதனையும் அடிகளாரின் இளைய மகள் வயிற்றுப் பேரனை திரு. கு. நம்பியாரூரன் எம். ஏ பெற்றிருப்பது இரட்டிப்பு மகிழ்ச்சிக்குரிய தாம். இவர் திருவாளர் குஞ்சிதபாதம்பிள்ளை திரிபுரசுந்தரியம்மையார் பெற்றெடுத்த பெருஞ் செல்வத் திருமகனுராவர்.



திரு. நம்பியாரூரன் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பயின்று வரலாற்றுத் துறையில் எம். ஏ. பட்டம் பெற்ருர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'சேக்கிழார்' பற்றிய ஆய்வுக்கு எம். லிட். பட்டம் பெற்ருர். சென்னை மாநிலக் கல்லூரியில் வரலாற்றுத் துறையில் பேராசிரியராகப் பணியாற்றி வந்த நிலையில் இவருக்குக் காமன்வெல்த் கல்வித்துறைப் பணியாளர் உதவித்தொகை கிடைத்தது. அதன் உதவியால் இலண்டன் பல்கலைக் கழகத்தின் கீழ்த்திசை ஆப்பிரிக்கக் கல்விப் பள்ளியில் வரலாற்றுத் துறையில் 'டாக்டர்' பட்ட ஆய்வு மேற்கொள்ள முடிந்தது.

'1905-1944 இல் தமிழ் மறுமலர்ச்சியும் திராவிடத் தேசியமும்-மறைமலையடிகளாரின் நூல்களும்' என்ற தலைப்பில் ஆய்வு செய்யத் திரு நம்பியாரூரன் இலண்டனுக்குத் தம் துணைவியார் சாரதா அம்மையாருடனும் மக்கள் சித்திரா, இந்திராவுடனும் சென்ருர். ஏறத்தாழ மூன்றரை ஆண்டுகள் இலண்டனிலேயே தங்கி வரலாற்றுப் பேராசிரியர் கே. ஏ. பாலாட்செட் (Prof. K. A. Ballhatchet) அவர்களின்கீழ் இவர் ஆய்வு நடத்தினர். ஆய்வு தமிழ்தொடர்பாக இருத்தலின் அதே பள்ளியில் தமிழ் விரிவுரையாளராக இருக்கும் டாக்டர் ஜே. ஆர். மார் (Dr. J. R. Marr) அவர்களும் திரு. நம்பியாரூரனுக்குப்

பேருதவியாக இருந்து ஆய்வேட்டை உருவாக்குவதில் உதவியுள்ளார்.

ஆய்வேடு மூன்று பகுதிகளாக உள்ளது. முதற் பகுதியில் பார்ப்பனரல்லாதார் இயக்கம், தமிழ்மொழி, இலக்கிய மறுமலர்ச்சி, சென்னைப் பல்கலைக் கழகமும் தமிழும் போன்றவை விரிவாக ஆயப்பட்டுள்ளன. இரண்டாம் பகுதியில் நீதிக்கட்சி, சுயமரியாதைக் கட்சி, இந்தி எதிர்ப்பு இயக்கம், தந்தை பெரியாரின் தலைமையில் திராவிடத் தேசியத் தோற்றம், திராவிட நாடு கோரிக்கை, தமிழிசை இயக்கம் ஆகியவை விரிவாக ஆயப்பட்டுள்ளன.

மூன்றும் பகுதியில் அடிகளாருடைய வாழ்க்கை, தனித் தமிழியக்கம், திராவிட-ஆரிய இனச்சிக்கல் பற்றிய அடிகளின் கருத்துகள், சைவ சமயம், தத்துவம்பற்றி அடிகளாரின் விளக்கம், அடிகளும் சமுதாயச் சீர்திருத்தமும்பற்றிய விளக்கம் ஆயப்பட்டுள்ளன.

மொத்தத்தில் தமிழ் மறுமலர்ச்சிக்கும் திராவிடத் தேசியத்தின் வளர்ச்சிக்கும் அடிகளாரின் எழுத்துப்பணி எவ்வாறு உதவியுள்ளது என்பதை ஆய்வாளர் விரிவாக 410 பக்க அளவில் ஆய்ந்துள்ளார்.

'இத் துறைபற்றி வந்துள்ள சிறந்த ஆய்வுகளில் இவ்வாய்வு நூலும் ஒன்று' என்று இவ் ஆய்வேட்டினை டாக்டர். ஜே. ஆர். மார் பாராட்டியுள்ளார்.

'தெற்காசியாவின் தற்கால வரலாறு தொடர்பான ஒரு முக்கியமான சிக்கலைப் பற்றிய ஆய்வுக்கு இவ் ஆய்வேடு பெரிதுந் துணை புரியும்' என்று இதன் தேர்வாளர்கள் மிகவும் உயர்வாகப் போற்றிப் பாராட்டினர்கள் என்று பேராசிரியர் பாலாட்செட் அவர்கள் திரு. நம்பியாரூரனுக்கு வழங்கியுள்ள நற்சான்றிதழில் குறிப்பிட்டுள்ளார்.

'இலண்டன் நூலகங்களில் மறைமலையடிகளாரின் நூல்கள்' என்ற தலைப்பில் அங்குள்ள பிரிட்டிசு மியூசியம், இலண்டன் பல்கலைக் கழக நூலகம், இந்திய ஆபீசு நூலகம் ஆகியவற்றில் இடம் பெற்றுள்ள அடிகளாரின் நூல்களுக்கு 'நூற்றொகை' தொகுத்து எழுதிய கட்டுரை ஒன்றை 'இலண்டன் இராயல் ஏசியாடிக் சொசைட்டி' இதழில் வெளியிட்டுள்ளார்.

திரு நம்பியாரூரன் ஆய்வுப் பணியிலீடுபட்டிருந்த அதே சமயத்தில் ஓய்வு நேரத்தில் பல நல்ல பணிகளையாற்றியுள்ளார்.

இலண்டனில் உருவாகிவரும் முருகன் கோவிலுக்குச் செயலாள ராக இருந்து கார்த்திகை வழிபாடுகளைச் செம்மையாக நடத்தி யுள்ளார். பி. பி. சி. வானொலி நிகழ்ச்சிகளில் 'தமிழோசை'ப் பகுதியில் செய்திகள் படிப்பதும், பேட்டிகள் காண்பதுமாகப் பல நிகழ்ச்சிகளில் ஈராண்டுகட்குமேல் பங்கேற்றூர். 'கிங்லி யர்' நாடகத்தில் நடித்துள்ளார். இலண்டன் தமிழ்ச் சங்கத்தில் 'தமிழ்ப் பண்பாடு' மறைமலையடிகள் பற்றிய விரிவுரைகளை ஆற்றியுள்ளார்.

இவர் தம் துணைவியாரான திருமதி. சாரதா நம்பியாரூரன், எம். ஏ. சென்னை அரசு கல்லூரிகளில் தமிழ்த்துணைப் பேராசிரிய ராகப் பணியாற்றி வந்தவர். இவரும் தம் கணவருடன் இலண்டனுக்குச் சென்று தமிழ்ப் பணியாற்றி வந்துள்ளார். பகுதி நேரப் பணியாக உள்நாட்டு வருவாய்த் துறையில் எழுத்தராக இருந்திருப்பினும் ஓய்வு நேரத் தைத் தமிழைப் பரப்பவும் சைவத் தைப் பரப்பவும் பயன்படுத்தி யுள்ளார். பி. பி. சி; இலண்டன் தமிழ்ச்சங்கம் ஆகிய அமைப்பு களின்கீழ் இசை நிகழ்ச்சிகளையும் சொற்பொழிவுகளையும் நிகழ்த்தி யுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். வாய்ப்பு நேர்ந்த போதெல்லாம் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம், யார்க் பல்கலைக் கழகம், பாரிசு தமிழ்ச் சங்கம் முதலியவற்றில் தனி இசை நிகழ்ச்சிகளை ஆற்றியுள்ளார். பிரித்தானிய சைவ மாமன்றத்திலும் இலண்டன் முருகன் கோயில் குழுவிலும் செயற்குழு உறுப்பினராக இருந்து சைவத் தொண்டாற்றி யுள்ளார். இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் மாணவிகள் இருபதின்மருக்குத் தேவார, திருப்புகழ்ப் பாடல்களை இசை யுடன் பாட உதவும் வகையில் 'இசை வகுப்பு' நடத்தியுள்ளார்.



மறைமலையடிகளாரின் நூற்றாண்டு விழா ஆண்டில் அவர் நூல்களைப் பற்றி ஆய்ந்து அவருடைய பேரனான திரு. நம்பியாரூரன் இலண்டன் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றிருப்பது பாராட்டுதற்குரிய செய்தியாகும்.

———

# எங்கள் தமிழ்மொழி

[என். கே. வேலன்]

ஆத்திக சமாசத்தில் இலக்குமி நரசிம்மன் என்ற சமக் கிருதப் பண்டிதர் வால்மீகி இராமாயணத்தை வடமொழியில் பாடிக்கொண்டு தமிழ்மொழியில் சொற்பொழிவு நிகழ்த்தி வருகின்ருர். காஞ்சி ஆச்சாரியாரின் ஆசிபெற்றுக் காமாட்சி அம்மன் கோவில் திருப்பணிக்காக இராமாயணம் படித்து நிதி திரட்டப்படுகின்றது. இதுவரை எழுபது ஆயிரத்துக்குமேல் தமிழ்மக்கள் வாரி வழங்கியுள்ளனர்.

சொற்பொழிவாளர் இடையிடையே சமக்கிருத மொழியின் பெருமையைப்பற்றிப் பேசுகின்ருர். அதற்கிணையான மொழி உலகில் வேறெங்குமில்லையெனக் கூறுகின்ருர். ஒருமுறை திருக்குறளிலிருந்து மேற்கோள் எடுத்துக்காட்டியபோது பின் வருமாறு கூறினுர் :—திருவள்ளுவர் வடமொழி நூல்களிலிருந்து அருமையான கருத்துக்களை எடுத்துத் திருக்குறளை இயற்றி யுள்ளார் என்றும், தமிழ்மட்டும் படித்தவர்கள் திருக்குறளின் நூல்நயத்தை அறியமுடியாதென்றும், வடமொழியில் பயிற்சி பெற்றவர்களே அதன் உட்பொருளை உணரமுடியும் என்றும் கூறினுர்.

உலக வழக்கொழிந்து சிதைந்துபோன மொழியை உயர்த் துவதற்கு இப்படியெல்லாம் பேசவேண்டுமா? தமிழின் துணையின்றி இப் புலவர் வால்மீகி இராமாயணத்தைப் பற்றிப் பேசமுடியுமா?

தமிழ்மொழியை வைத்துப் பிழைப்பவர்கள் தமிழ் நூல் களைக் குறைத்துப் பேசலாமா? தமிழ்மொழியின் அருமை பெருமைகளைத் தெரிந்தும் தெரியாதவர்போல் நடிப்பது ஏன்?

வடமொழியைப் போற்றுகின்றவர்கள் தென்மொழியைத் தூற்ருமல் இருக்கக்கூடாதா?

நெஞ்சு பொறுக்குதில்லையே இந்த
நிலைகெட்ட மாந்தரைக் கண்டுவிட்டால்

என்று கூறத் தோன்றுகின்றது.

"எங்கள் தமிழ்மொழி, எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே"

என வாழ்த்துவோம்.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## நடுவணரசு நிதியமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் 66 ஆவது பிறந்தநாள் குறித்துச் சென்னைத் திருக்கோயில்களில் சிறப்பு வழிபாடு

*31–1—1976* சனிக்கிழமை காலை 7 மணி முதல் 12 மணிவரை மண்ணடி அருள்மிகு செல்வவிநாயகர் கோயில், தம்புச் செட்டித் தெரு அருள்மிகு காளியம்மன் கோயில், அருள்மிகு கந்தகோட்டம் கந்தசாமி கோயில், மயிலை அருள்மிகு கற்பகாம்பாள் கபாலீசுரர் கோயில், அருள்மிகு வடபழனிஆண்டவர் கோயில் ஆகிய ஐந்து திருக்கோயில்களிலும் மிகவும் சிறப்பாக வழிபாடுகள் நடைபெற்றன. மாண்புமிகு நிதியமைச்சரவர்கள் நேருதவியாளர் திரு பழனியப்பனவர்களோடு கழக ஆட்சியாளரும், பொது மேலாளரும் குடும்பத்தோடு சென்று வழிபாடுகளிற் கலந்து கொண்டனர். எல்லாம் வல்ல இறைவனருளால் மாண்புமிகு நிதி அமைச்சரவர்கள் முழு நலத்துடன் நாட்டுக்கு மேலும் நற்றொண்டு செய்யத் திருவருள் புரியும்படி வழிபாட்டிற் கலந்து கொண்டவர்களெல்லாம் உளமார வேண்டினர்.

## இந்தியத் தலைமை அமைச்சரும் நூற்கல்வியும்

*24-1-76* இல் திருவாட்டி இந்திராகாந்தி அம்மையார் தாம் ஒரு எழுத்தாளருமல்லர், பதிப்பாளருமல்லர், ஆனால் நூல்களைப் படிப்பதில் பேரார்வம் உடையவர் என்று பேசினர். "என் பாட்டனார் மோத்திலால் நேரு வாழ்ந்த மாளிகையை அறத்திற்காக விட்ட பொழுது, தொகுத்து வைக்கப் பெற்ற நூல்களும், அங்கேயே விட்டு வைக்கப்பெற்றன. என் தந்தையார் வீடு கலைமன்றமாக்கப்பட்ட போது, அவர்களுடைய நூல்களும் அங்கேயே நிறுத்திவைக்கப் பெற்றன. இப்போது யான் படிப்பதற்காக வாங்கிய நூல்களை வைத்து நூல்நிலையம் அமைத்து வருகின்றேன்.

"குடியிருக்கும் வீடுகள் சிறியவையாய் இருந்தால் புத்தகங்களை எப்படித் தொகுத்து வைக்க முடியும்? ஆதலினால் மிகுதியான மக்கட்குப் பயன்படத்தக்க நூல் நிலையங்கள் ஏற்படுதல் வேண்டும்.

"சிலர் புத்தகங்களை நல்ல முறையில் பேணுவதில்லை. படிப்பதற்குப் புத்தகங்களைக் கொடுப்பின், அவை நல்ல முறையில் திரும்பவரும் என்று நம்புதற்கில்லை. பொதுவாக அது திரும்ப வந்துவிடும் என்று சொல்வதற்குமில்லை' என்றும் கூறினர்.

## தினமணிக் கதிரில் தவத்திரு குன்றக்குடியடிகளார் திருவுருவம்

இன்று (12-12-75) அலுவலகத்திலிருந்து வீட்டுக்கு வந்ததும் என் மேசைமேல் தினமணிக்கதிரின் வண்ணமேலுறை புறப்பக்கங்களிரண்டும் என் கண்ணில் படும்படி விரித்து வைக்கப் பெற்றிருந்தன. வலப்பக்க முகப்பில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அருள் நிறைந்த திருவுருவக வண்ணப்படம் வெண்தாடியுடன் அழகொழுகுவதாய்க் கண்ணைக் கவர்ந்தது. ஆனால் இடப் பக்கத்தில் பனாமா சிகரெட் (புகைவெண்சுருள்) விளம்பரத்தில் இருவர் எதிரெதிரில் தம் வாயில் சிகரெட் வைக்கப் பெற்றுள்ள வண்ணப்படம் என் உள்ளத்தை எங்ஙனம் வருத்தியிருக்கும் என்பதை யான் சொல்லத் தேவையில்லை.

அட்டையில் காணப்பெறும் அடிகளாரைப் பற்றி உள்ளே 5 ஆவது பக்கத்தில் எழுதப் பெற்றுள்ள குறிப்புகள் மகிழ்ச்சி யளித்தன, ஆனால் அதனையடுத்து இதழைப் புரட்டியபோது 23, 24, 29, 35, 36, 40 ஆம் பக்கங்களிலுள்ள படங்கள் மிக்க அருவருப்பைத் தந்தன. தவத்திரு அடிகளார் உள்ளம் இதனை ஏற்குமா வெறுக்குமா என்பது இதனைப் படிக்கும் அடியவர்கள் சிந்தனைக்கு விட்டுவிடு கிறேன்.

மகளிர் ஆண்டில் மாதரை இழிவுபடுத்துவது பொருந்துமா? மகளிர் உலகம் கவனிக்க! வ. சு.

## கைகூப்பிக் கும்பிடுமுறை

நூலகத்துறையில் உலகு புகழ்பெற்றுக் காலஞ்சென்ற டாக்டர் எச். ஆர். அரங்கநாதன் அவர்கள் ஒருமுறை மறைமலையடிகள் நூல் நிலையத்தில் பேசும்போது நூலக இயலறிஞர்கள் பொதுவாக எல்லாப் பொருள்களைப் பற்றியும் ஓரளவு தெரிந்திருக்க வேண்டுமென்று பேசிய போது, கும்பிடு முறை பற்றியும் குறிப்பிட்டனர்.

ஒருவரை எதிர்நோக்கிக் கும்பிடும்போது தம் இரு கைகளையும் தமது நெஞ்சுக்கு நேர்கூப்பி அவருடைய நெஞ்சுக்கு நேராகக் கும்பிடு தல் வேண்டும். கும்பிடு பெறுபவரும் கும்பிடுவோரை நோக்கி அதேபோல் எதிர் கும்பிடு செய்தல் வேண்டும்.

கும்பிடு உடலுக்கன்று; உயிருக்கும் நெஞ்சிலிருக்கும் இறை வனுக்குமே. அதனாலேதான் மாணிக்கவாசகர் "இமைப்பொழுதும் என் னெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என்று சிவபுராணத்தில் கூறி யருளினர். ஒருவர் நெஞ்சில் ஆடிக்கொண்டிருக்கும் இறைவனது ஆட்டம் நின்று விடின் அவர்தம் உயிரும் உடலை விட்டு அகன்றுவிடும்.

அறிஞர்களில் ஒருசிலர் அதனை அறியாமல் எதிரிலுள்ளவரைத் தமது வலப்பக்கமாக இரு கைகளையும் கூப்பி உயர்த்திக் கும்பிடுவதைக் காண்கின்றோம். அவர்கள் தம் கைகளில் தடி கொண்டு கும்பிடு பெறுவோரை அடிப்பது போலத் தோன்றும். அப்படிக் கும்பிடுபவர் நல்லன செய்ய ஒருபோதும் விரும்பார் என்றும் அல்லன செய்தலிலே பெருமை கொள்வர் என்றும் அறியலாம். ஒருவர் செயலைக் கொண்டு அவருடைய பண்பு இத்தன்மைய தென்று கலைவல்லார் கூறுவர்.

சிறுவன் ஒருவன் பெரியவர் ஒருவரை நோக்கிக் கும்பிடுவது இந்தப் பெரியவர் தன்னை வாழ்த்த வாழட்டும் என்று இறைவனை வணங்கி வேண்டுதலாகும். அதேபோலக் கும்பிடு பெறும் அப் பெரியவர் சிறுவனை நோக்கி எதிர் கும்பிடு போடுவது சிறுவன் எல்லா நலங்களும் பெற்று நீடு வாழட்டும் என்று இறைவனை வணங்கி வேண்டி வாழ்த்துத லாகும்.

ஆகவே, கும்பிடுவது நெஞ்சில் உறையும் இறைவனுக்கே அன்றி உடலுக்கன்று என்பது உணர்தற்பாலது.

## சமக்கிருதத்தைப் பரப்ப வேண்டுமாம்

"மற்ற மொழிகள் இலக்கிய வளர்ச்சிக்குப் பயன்படுத்தப் பட்டன போல் சமக்கிருதம் பயன்படாமல் சாத்திரங்கட்குரிய மொழியாக இருந்தபடியினால் பெரும் வீழ்ச்சி யுற்றது. எனவே, மற்ற மொழிகளுக்

இருப்பது போன்ற முதன்மை சமக்கிருத மொழிக்கும் அளிக்கப்பட வேண்டும். உத்தரப் பிரதேசத்தையும் மத்தியப் பிரதேசத்தையும் பின்பற்றி ஆண்டுதோறும் சமக்கிருத இலக்கியங்கட்குப் பரிசு வழங்கப்பட வேண்டும். சமக்கிருதம் ஒரு சிறந்த இணைப்பு மொழியாகும்" என்று பெங்களூரில் 6-2-76 இல் நடைபெற்ற சமக்கிருத மாநாடொன்றுக்குத் தலைமை தாங்கிய சென்னைப் பல்கலைக் கழக சமக்கிருதப் பேராசிரியர் டாக்டர் வி. ராகவன் பேசியிருக்கிறார்.

## மைய நிதி அமைச்சவையில் இந்தி

நிதி அமைச்சவையில், இந்திமொழியின் வளர்ச்சி பற்றி அறிவுரை கூற 20 உறுப்பினர்களைக் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. நிதி அமைச்சர் அதன் தலைவராக இருப்பார். பாங்கு, வருவாய்த்துறை அமைச்சர் அதன் துணைத் தலைவராய் இருப்பார்.

## இந்தியே இணைப்பு மொழியாதற் குரியது

"ஆங்கிலம் பேசுவோர் நாற்றுக்கு இருவர்கூட இல்லை. எனவே, இந்திமொழியை இணைப்பு மொழியாக்க வேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும்' என்று 6-2-76 இல், பெண்கள் துவக்கப்பள்ளி ஆசிரியர்களிடையே பேசிய இந்தியத் தலைமை அமைச்சர் இந்திராகாந்தி அவர்கள் குறிப்பிட்டார்.

## டாக்டர் மு. வ. நினைவுக் குழு

டாக்டர் மு.வ. அவர்களின் தமிழ்த் தொண்டினை நினைவுகூர்தற் பொருட்டுத் திருப்பதி திருவெங்கடேசுவரர் பல்கலைக்கழகத்தின் தமிழ்த் துறையின் சார்பில் டாக்டர் மு. வரதராசனார் நினைவுக் குழு என்ற பெயரால் குழு வொன்று அமைக்கப்பெற்றுள்ளது. இக் குழுவின் புரவலராகப் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களும் தலைவராகப் பெரி. தியாகராசச் செட்டியார் அவர்களும், துணைத் தலைவராகத் திரு. கே. என். முத்தையா அவர்களும், பொருளாளராகத் திரு. கே. ஏ. செல்லப்பன் அவர்களும் செயலாளராக டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களும் அமைந்துள்ளனர். மற்றும் டாக்டர். ந. சஞ்சீவி, பேராசிரியர் அ. மு. ப. உட்பட ஒன்பது உறுப்பினர் உள்ளர். இக் குழுவின் சார்பில் முறையே 31—1–76, 1—2—76 நாள்களில் கருத்தரங்குகள் நடைபெற்றன.

## மதுரைப் பல்கலைக் கழகத்தில் மு. வ. கருத்தரங்கு

மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையின் சார்பில், சனவரித் திங்கள் 5, 6, 7, 8 ஆம் நாள்களில், முறையே துணைவேந்தர் திரு. சை. வே. சிட்டிபாபு, திரு. அகிலன், டாக்டர். ச. வே. சுப்பிரமணியம், சிலம்புச் செல்வர் ம. பொ. சி. ஆகியோர் தலைமையில் இரண்டாவது தொடர் கருத்தரங்கு நடைபெற்றது. பல்வேறு பொருள்கள் பற்றி அறிஞர்கள் பலர் ஆய்வுச் சொற்பொழிவாற்றினர்.

## மயிலையில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் பொன் விழா

28-1-76இல் மயிலைக் கற்பகாம்பாள் திருமண மண்டபத்தில், தவத்திரு. குன்றக்குடி அடிகளாரின் பொன்விழா வாழ்த்துக் கூட்டமொன்று

நடைபெற்றது. திருப்பனந்தாள் காசிமடம் மதுரை, திருஞான சம்பந்தர் ஆதீனம்; காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீனம், மயிலம் பொம்மபுர ஆதீனம், பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடம்; திருப் பாதிரிப் புலியூர் ஞானியார் அடிகள் மடாலயம்; கோவைச் சிரவண புரம் கௌமார மடாலயம் ஆகிய சைவத்திரு மடங்களின் தலைவர்களும், காஞ்சி காமகோடி பீடத் தலைவரும், தவத்திரு அடிகளாருக்குப் பொன் விழா வாழ்த்துகளை வழங்கினர். அடிகளார் நன்றியுரை நவின்றபின் கூட்டம் இனிது முடிந்தது.

## கீழப் பழுவூரில் அடிகளார் பொன் விழா

திருச்சி மாவட்டம் கீழப் பழுவூர் அரசினர் உயர்நிலைப்பள்ளியில் தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் பொன் விழா 21-1-76இல் சிறப் பாகக் கொண்டாடப் பெற்றது. புலவர் சுவை மருதவாணன் எம். ஏ. எழுதிய 'மன்குடி மணிமலர்' என்னும் நூல் விழாவில் வெளியிடப் பெற்றது. திரு. சாம்பசிவம், எம்.ஏ., பி.டி., மற்றும் அறிஞர் பலர் அடிகளாரை வாழ்த்திப் பொன்விழாவினைச் சிறப்பித்தனர்.

## தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் விருது வழங்கும் விழா

25-1-76இல், இராசாசி மண்டபத்தில் தமிழக ஆளுநர் மேதகு கே. கே. ஷா அவர்கள் தலைமையில், தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தாரின் விருது வழங்கு விழா, மிகச் சிறப்பாக நடைபெற்றது இயல் இசை நாடகத் துறைகளில் புகழ் பெற்ற கலைஞர்களுக்கு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் விருதுகளை வழங்கினர். சிலம்புச் செல்வர் ம.பொ.சி, கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் (இவர் 'நாடகப் பாடலாசிரியர்' என்ற பட்டம் பெற்றுள்ளனர்) முதலிய 21 கலைஞர்கள் விருதுகளைப் பெற்றனர்.

## ஆறுவது திருக்குறள் மாநாடு

சென்னை, இராயப்பேட்டை திருவள்ளுவர் மன்றத்தின் சார்பில் சனவரி 24, 25ஆம் நாள்களில் கலைவாணர் அரங்கில், சட்டப்பேரவைத் துணைத்தலைவர் மாண்புமிகு ந. கணபதி அவர்கள் தலைமையில் திருக் குறள் ஆறுவது மாநாடு சிறப்புற நடைபெற்றது. மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் கருணாநிதி சிறப்புரை ஆற்றினர், டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன், மற்றும் பல அறிஞர்கள் வாழ்த்துரை வழங்கினர். நடுவர் எஸ். இரத்தின வேல் பாண்டியன் அவர்கள் தலைமையில் முதல் நாள் கருத்தரங்கும், தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் 2ஆம் நாள் நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் உட்படப் பல தமிழ் அறிஞர்கள் உரையாற்றினர். புலவர் பொன்னி வளவன் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது.

## மாநிலக் கல்லூரியில் சங்க இலக்கியக் கருத்தரங்கம்

சென்னை மாநிலக் கல்லூரியில் 24-12-75 தொடங்கி 31-12-75 முடியத் "தமிழெனப்படுவது சங்கத் தமிழே" என்ற தலைப்பில் 15 தமிழறிஞர்கள் ஆய்வுரை நிகழ்த்தினர்.

## குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம்

குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் 28ஆவது ஆண்டு நிறைவு விழா முறையே சனவரி 2, 3,4 ஆம் நாள்களில் ஆதி கும்பேசுவர சுவாமி கோவில் ஸ்ரீமங்கள விலாச நால்நிலையத் திருக்கல்யாண மண்டபத்தில் நடைபெற்றது.

## இருபெருங் கவிஞர்கள் விழா

சனவரித் திங்கள் 23, 24ஆம் நாள்களில் மதுரை மாநகராட்சி அறிஞர் அண்ணா மாளிகையில், மகாகவி பாரதியார் விழாவும், பாவேந்தர் பாரதிதாசனார் விழாவும் சிறப்புற நடைபெற்றன. இவ் விழாக்களின் தொடர்பாகக் கருத்தரங்கு, பட்டி மன்றம் ஆகியவையும் நடைபெற்றன. போட்டிகளில் வெற்றி பெற்றவர்கட்குப் பரிசுகளும் பாராட்டுரைகளும் வழங்கப் பெற்றன.

## கல்லூரி நூல்கள் வெளியீட்டு விழா

19—1—76இல் கலைவாணர் அரங்கில் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் சார்பில் கல்லூரி நூல்கள் வெளியீட்டுவிழா டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நடை பெற்றது. மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களால் நூல்கள் வெளியிடப் பெற்றன. கல்வித் துறைச் செயலர் திரு. க. கோ. அரங்கபாஷ்யம், டாக்டர் வா. செ. குழந்தைசாமி, பேராசிரியர் சு. ந. சொக்கலிங்கம் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

## திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரித் தமிழ் விழா

நக்கீரர் கழகத்தின் சார்பில் இயங்கி வரும் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் தமிழ் விழா 16—1—76இல் நடைபெற்றது. திருமதி பார்வதி சுப்பராமன் தலைமை தாங்கினார். செல்வி தி. க. சத்தியம், எம். ஏ. 'கால்டுவெல் ஒப்பிலக்கணம்' பற்றிச் சொற்பொழிவாற்றினார். முதுகலைப் பட்டம் பெற்ற திரு. பூ. சுப்பிரமணியம் அவர்களும், அரசினர் பரிசு பெற்ற டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்களும் பொன்னாடை போர்த்திச் சிறப்பிக்கப் பட்டனர். கல்லூரிப் பேராசிரியர்கட்குக் கல்லூரி மாணவர்கள் திருக்குறள் நாட்குறிப்பும், திருக்குறள் நாட்காட்டியும் வழங்கினர்.

## நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களின் துணைவியார் மறைவு

நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களின் துணைவியார் திருவாட்டி இந்திராணி அம்மையார் அவர்கள் 26—1—76 திங்கட்கிழமையன்று இறையடி சேர்ந்தார்கள் என்னும் செய்தியறிந்து வருந்துகிறோம். அவர்தம் மைந்தர் திரு. வே. நடராச நாட்டார் அவர்கட்கும் அவர்தம் குடும்பத்தார்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

## மறைமலையடிகள் நூற்றாண்டு
## நினைவுப் படைப்பிலக்கியப் போட்டி

1. படைக்க வேண்டிய இலக்கியம் :
   "மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ்"
2. சிறந்த படைப்பிற்கு ரூ. 2,000 (ரூபாய் இரண்டாயிரம்) பரிசு தரப்படும்.
3. விதி முறைகள் :—
   1. பிள்ளைத் தமிழிற்குரிய இலக்கண வரம்புகளுடன் தூய தமிழ் நடையில் அமைதல் வேண்டும்.
   2. தாளின் ஒரு பக்கத்தில் தட்டெழுத்தில் அமைத்த மூன்று படிகளை அனுப்ப வேண்டும்.
   3. தேர்ந் தெடுக்கப்பெற்ற நூல் காரைக்குடி, இராமசாமி தமிழ்க் கல்லூரிக்கு உரிமையுடையதாகும்.
   4. போட்டிக்குரிய கடைசி நாள் 31—7—76
   5. அனுப்ப வேண்டிய முகவரி :
      முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி,
      காரைக்குடி — 623001.

இராம. பெரியகருப்பனுர்,
போட்டி அமைப்பாளர்

---



## வெளியார் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| மாதவி அரங்கேறினுள்—க. சி. கமலையா | 7 | 50 |
| சித்தர் மெய்ப்பொருள்—வி. பலராமையா | 3 | 00 |
| இலக்கிய எண்ணங்கள்—ஜே. ஜி என். தாசன் | 2 | 50 |
| முதுகலைப்பூந்துணர்—கோதில்மொழியன், இரத்தினம் | 12 | 00 |
| திராவிட மொழிகளின் ஒப்பாய்வு (ஓர் அறிமுகம்) —ஜி. ஜான் சாமுவெல் | 10 | 00 |
| இளவேனில்-தொகுதி 4 —கேரளப் பல்கலைக்கழகம் | 10 | 00 |
| உறவுகள்—நீல. பத்மநாபன் | 20 | 00 |
| உலகில் தமிழும் தமிழரும் —டாக்டர் பொன். கோதண்டராமன் | 4 | 00 |
| தென் குமரித் தெய்வம்—மா. வழித்துணைவ. | 10 | 00 |
| பாரதி புதையல்-3—ரா. அ. பத்மநாபன் | 12 | 00 |
| சொல்லியல்—கு. இன்னசி | 15 | 00 |
| சமுதாய மொழியியல்—டாக்டர் கி. கருணாகரன் | 10 | 00 |
| பெத்லேகம் குறவஞ்சி—வேதநாயக சாஸ்திரியார் | 6 | 50 |
| நீ ஒரு பண்புத்தொகை—க. ப. அறவாணன் | 4 | 00 |

பதிவு எண் : M. 4899

## கழகப் புதிய வெளியீடுகள்

**அருணகிரிநாத அடிகள் புராணம் (தண்டபாணியடிகள்)**

—தி. செ. முருகதாச அடிகள் உரை

அருணகிரிநாத அடிகளின் வரலாற்றினைச் சுவைபடக் கூறும் செய்யுள் நடையில் அமைந்துள்ள புராணநூல். நூலாசிரியர் வரலாற்றுச் சுருக்கம், முன்னுரை, சிறப்புப் பாயிரம் ஆகியவற்றுடன் கூடிய விரிவான நூல். ரூ. 8 50

**நரம்பு மருத்துவம் (NEUROLOGY)**

டாக்டர் கா. லோகமுத்துக்கிருட்டிணன்,
M.S. (Gen.) M.Ch. (Neuro)., F.R.C.S. (Edin)., F.I.C.S.

இது கழகம் தமிழில் வெளியிட்டுள்ள மூன்றுவது மருத்துவ நூலாகும். இதன்கண் நரம்பு மண்டலம் பற்றிய நோய்களும் அவற்றைக் குணப்படுத்தும் முறைகளும் விளக்க மாகத் தரப்பட்டுள்ளன. அரிய படைப்பு அழகிய பதிப்பு.

ரூ. 15 00

**வாய், பல், மருத்துவம்**

டாக்டர் J. G. கண்ணப்பர், மற்றும் பல் மருத்தவர் மூவர் சேர்ந்தியற்றிய பயனுள்ள மருத்துவ நூல். அரசினர் பரிசினைப் பெற்ற நூல். ரூ. 10 00

**கண் மருத்துவம்**

—டாக்டர் செ. பா. பாலசுப்பிரமணியம்
B.Sc., M.B.,B.S., M.S.

கண்களின் அமைப்பு, கண்களுக்கு வரும் நோய்கள், அவற்றைத் தடுக்கும் முறைகள், மருத்தவ முறைகள் இன்னபிற சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறும் நூல். ரூ. 10 00

**பள்ளி மாணவர் பல்வகை நூல்கள்**

இதன்கண் பள்ளி மாணவர்களுக்கேற்ப அறிவியல், பொருளியல், இலக்கியம், சமயம், அரசியல், வரலாறு, கதை, கட்டுரை, கவிதை, நாடகம் ஆகிய பலதுறை நூல்கள் இனிய எளிய நடையில் எழுதப்பட்டுள்ள 321 நூல்கள் 45 அட்டைப் பெட்டிகளில் 4 தட்டுகள் கொண்ட அழகிய கண்ணாடிப் பேழையில் வைத்து விற்பனைக்கு வழங்கப்படுகின்றது. பள்ளி நூலகத்திட்டத்திற்குப் பயன்படும் இப் பேழை பள்ளி நூலகங்கள்தோறும் இருக்கவேண்டிய பேழை.

குறைந்த விலை, ரூ. 700/-

அச்சிடப்பெறும் இரண்டு அரிய நூல்கள்

க. தகடூர் யாத்திரை விளக்கவுரை
—புலவர் இரா. இளங்குமரன்

உ. சங்க இலக்கியத்தில்-புள்ளின விளக்கம்
—புதுவை பி. எல். சாமி, பி. எஸ்ஸி